ஆண்கள் பல் துலக்குகிறார்கள். பெருமூச்சுவிடுகிறார்கள். அதன் பின் அவள் சிறிது நேரம் கழித்து நீராட வருகிறாள். லலிதா அரைப் புடவை கட்டிக்கொண்டு தையல் பள்ளிக்குப் புறப்பட்டுப் போகிறாள். ஆண்களின் சைக்கிளில் அவள் உந்தி ஏறும்போது எதிர் வீட்டுக் கிழவன் தினமும் பார்த்துக்கொண்டிருக்கிறான். அவளது முன்தொடை அந்நேரத்தில் பளிச்சிடுவதை அவன் அதீத விருப்பத்துடன் பார்த்துக்கொண்டிருக்கிறான். லலிதா பெண்கள் ஓட்டும் சைக்கிள் வாங்கிவிட வேண்டுமென்றுதான் ஆசைப்பட்டாள். அது முடியாமல் குறைந்த விலைக்குக் கிடைக்கிறதென்றூ அன்னம்தான் இந்த சைக்கிளை வாங்கிப் போட்டாள். அது தன் அம்மாவுக்காகத்தான் அவ்விலைக்குக் கிடைத்திருக்கிறதென்று அவளுக்குத் தெரியும்.

அவ்ள் கிளம்பிச் செல்லும்போது அப்படித்துறையை வெறுப்புடன்தான் பார்த்தபடி போகிறாள். அவர்களைச் சொல்லி என்ன இருக்கிறது, அம்மா சரியில்லை என்று நினைத்துக்கொண்டாள். இன்னும் சிறிது காலத்தில் சாகக் கிடக்கும் அக்கிழவனின் நடத்தை அவளுக்கு ஆச்சர்யமாகத்தான் இருக்கிறது. பல சமயங்களில் அவள் சைக்கிளில் ஏறுமுன் அவன் இருக்கும் பக்கம் பார்த்துக் காறித் துப்பியிருக்கிறாள். அவன் சில நாட்கள் கம்மென்றிருந்துவிட்டு மீண்டும் பார்க்கத் தொடங்கிவிடுவான். அவனுக்காகவே அவள் அவன் பார்வைபடாத மற்றும் எதிரில் ஆண்கள் வராத நேரமாய் சைக்கிளில் ஏற, ஏதோ சைக்கிளைத் துடைத்துச் சரிசெய்வது போலச் சாலையில் நின்றுகொண்டிருப்பாள். கிழவன் ஒரு நாள் வீட்டின் பின்புறம் வந்து நின்றுகொண்டு அவளைப் பார்த்தான். அவளுக்கு எரிச்சலாக இருந்தது. பல சமயம் அவனைச் சாடைமாடையாகத் திட்டவும் செய்திருக்கிறாள். அவள் அம்மாவிடம் கூறியபோது அவளும் கிழவனைத் திட்டிவிட்டு மேற்கொண்டு காரியம் பார்க்கத் தொடங்கிவிட்டாள். இத்தனை இளக்காரத்திற்கும் தன் அம்மாவையே லலிதா மீண்டும் மீண்டும் சாடிக்கொண்டிருந்தாள். அவளும் லலிதாவின் மனம் கோணாதபடி நடப்பதற்கு முயற்சி செய்துகொண்டுதானிருக்கிறாள். ஆண்கள் வராத நேரத்தில் நீராடச் சொன்னாள். அவளும் செய்தாள். ஆனாலும் அவள் நீராடும் செய்தி எப்படியோ காற்றின் வழி பரவிவிடுகிறது. சர்க்கஸ் வினோததத்தைப் பார்க்கும் கூட்டம்போல் சிறிது நேரத்தில் வேளை கெட்ட வெளையில் கூட்டம் கூடிவிடுகிறது.

அன்னத்திற்கு எல்லோரையும் தெரியும். படித்துறையில் பல ஆண்களுடன் அவள் நீராடியிருக்கிறாள். அவர்கள் அனைவரும் தன்னை ஒரே மாதிரிதான் பார்க்கிறார்கள், ஒரே புள்ளியில்தான் நடத்துகிறார்கள் என்பதை அவள் அறிவாள். ஆனால் ஆண்களின் பார்வை தன் மகளையும் அப்படியே பாவிக்கும் என்பதைத்தான் ஏற்றுக்கொள்ள முடியாமலிருக்கிறது. முடிந்தவரை தனது நீராடலைப் பிள்ளைக்குத் தெரியாமல்தான் பார்த்துக்கொண்டாள். அவளுக்கான பருவங்கள் விளையத் தொடங்கியதுமே கண்ணாடித் திரைபோல் காட்டிக் கொடுத்துவிட்டது. சில மாதங்களில் தன் மகளுக்கு மாதவிடாய் தள்ளிப்போகும் நாள்களில்கூடப் பதற்றத்துடன் எள்ளும் எள் பண்டங்களும் சூட்டுப் பழங்களும் தின்னத் தருவதை லலிதாவால் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. அது மறைமுகமாகத் தன் அம்மாவைப் போலவே தன்னையும் ஆக்கிவிடுவதற்கான வற்புறுத்தலோ என்று குழம்புகிறாள். சில சமயம் அத்தருணங்களில் அன்னத்தை அதற்காகத் திட்டவும் முறைத்துவிடவும் செய்திருக்கிறாள். மறுநாளும் மறுநாளுமான அதிகாலைக் குளியலின் மூலமாய்த் தன் புத்துயிர்ப்பையும் சேதாரமின்மையையும் அதிகாரத்துடன் உணர்த்துவாள். அப்போது லலிதாவின் கோபத்தை அன்னம் பொருட்படுத்துவதில்லை. மாறாக மிகவும் சந்தோஷப்படுவாள். அவளுக்கு அவளே வேலி என மனதில் முணுமுணுத்துக் கொள்வாள்.

*********

அன்னம் வடக்கு வெளிக்குச் சாக்கு மடித்து எடுத்துக்கொண்டு கூலி வாங்கப் போகிறாள். அவள் செல்லும் திசையில் தட்டுப்படும் அனைத்து ஆண்களும் அவளுடன் இருந்தவர்கள் கூட, விழிகளால் புணர்ந்து தீர்த்துக்கொள்கிறார்கள். அவள் குனிந்தபடியும் எங்கோ பார்த்தபடியும் இருபுறமும் கரும்பு வயல்களும் கருவேல மரங்களும் கிளைத்த வண்டிப்பாதையில் இயல்பாக நடந்துபோகிறாள். யாருமற்ற அவ்வேளைகளில்தான் அவளுக்கு இயல்புநடை கூடிவருகிறது. வானச் சரிவு தூரத்தில் பாதையின் முகத் திருப்பல்கள் மறைந்த நீட்சியைக் கற்பனைக்குள் கொண்டு வருகின்றன. சில வயல்களும் அதன் மறைவிடங்களும் சில புணர்ச்சிச் சம்பவங்களை நினைவில் தட்டிவிட்டு மறைகின்றன. வெவ்வேறு விதமான பகல் பொழுதுகள், வேளைகள், புணர்ச்சி முகங்கள். அவை வெவ்வேறு முகங்களே ஒழிய அதன் தவிப்பிலும் வெளிப்பாட்டிலும் பெரிதான மாற்றங்கள் எதுவும் இல்லை. எதனாலும் எதுவும் மிஞ்சிவிடவில்லை என்று அவள் அனுபவம் சொல்லிச் செல்கிறது.

அவள் செடிகளுக்கும் கரும்பு வயல்களுக்கும் நடுவில் தனித்துப் போவதை எரிமேட்டின் தொலைவிலிருந்து டிங்கு பார்த்தான். மனம் பரபரக்க ஓரமாக சைக்கிளை நிறுத்திப் பூட்டிவிட்டுக் குறுக்கே ஓடிவரத் தொடங்கினான். டிங்கை எல்லோரும் ‘லூஸு’ என்றார்கள். இளம் வாலிப மீசையும் மெல்லிய குறுந்தாடிப் படர்வும் நீளவாகு முகமுமாக, சிவப்பாக இருந்தான். கழுத்தோரத்தில் பச்சை நரம்புகள் இலை நரம்புகள்போல் படர்ந்து இறங்கியிருக்கும். வாயைத் திறந்தால்தான் அவன் திக்குவாயால் குளறுவது தெரியும்.

புழுதி வயல்களில் அவன் கால்கள் தறிகெட்டு ஓடி வந்தன. அவன் நினைப்பில் அன்னத்தின் கட்டியணைப்புகள் தெரிந்தன. மூச்சும் வியர்வையும் பெருகின. குறி குறுகுறுப்புடன் மிதக்கத் தொடங்கிவிட்டது. அவள் கூலி வாங்கத்தான் அங்கு போகிறாள் என்று யூகித்துக்கொண்டான். ஆட்கள் எதுவும் தட்டுப்படாத பட்சத்தில் அவளைக் கட்டிப் பிடித்து முத்தமிட வேண்டும் என்று நினைத்தான். இத்தனை நாளும் அவன் அப்படி நடந்துகொண்டதில்லை. ஆனால் அவனால் இனிமேலும் அதை மறைக்க முடியாது என்று எண்ணியிருந்தான். அவள் வீட்டுப் பக்கம் செல்ல மிகுந்த கூச்சமாக இருந்தது. அதோடு ஊரில் அவனைக் கிண்டலடித்தே சாகடித்துவிடுவார்கள் என்று காரணம் வைத்திருந்தான்.

அன்னத்திற்கு அசைபோட நினைவுகள் நிறைய இருக்கின்றன. எதையோ தனக்குள் முணுமுணுத்தபடி நடந்தாள். அவன் மறுதெம்பு(1) வயல்களில் புகுந்து மேடேறி அவளைப் பார்த்தான். நா வறட்சியும் பயமும் கூடிக்கொண்டன. அவளும் அவனைப் பார்த்தாள். கட்டுப்படுத்தப்படும் மூச்சிரைப்பும் வெளியேறும் வியர்வையும் அவன் ஓடி வந்திருக்கிறான் என்பதை எளிதாக உணர்த்தின. “என்ன இந்தப் பக்கம்” என்று விசாரித்தபடி கடக்க முனைந்தான். அவன் பல்லிளித்துக் கொண்டு நின்றான். ஒல்லிக் குச்சான கால்கள் தான் அவள் கண்களில் பட்டன.

”வறியா?” என்றான்.

சட்டென அவளுக்குத் தன் இளக்காரம் தெரிந்து கோபம்தான் வந்தது. அவனை அளந்தபடியும் முறைத்தபடியும் நடக்கத் தொடங்கினாள்.

“ஒரே ஒரு வாட்டிதான்” என்றான்.

அவள் ஒட்டுமொத்தமாக அவ்வூர் ஆண்களை நினைத்துக்கொண்டாள். அதில் இவனும் சேர்க்கப்பட்டுவிட்டான். அவள் திரும்பிப் பார்த்து, தான் கூலி வாங்கப் போவதாகவும் நாளைக்கு வீட்டுக்கு வரும்படியும் கூறினாள். அது ஒன்றும் பிரச்சினை இருக்காது என்று நினைத்தாள். அவன் மனத்தை முறிக்க இடமில்லாதவள்போலப் பேசினாள். அவன் வயதும் ஓடி வந்திருக்கும் தவிப்பும் அவளுக்கு இசைவாகவும் இருந்தன. அவன் பரிதாபமாக நின்றுகொண்டிருந்தான். அவளும் அவனைப் பார்த்துக்கொண்டிருந்தான். அவள் கடைத்தெருவில் கூட்டுறவு அங்காடியில் பொருள் வாங்கச் சென்ற போதெல்லாம் அவன் சமீபமாக நடந்துகொண்டிருந்த முறையில் அத்தனையிலும் காமம் ஒளிந்திருந்ததைச் சட்டெனத் தற்போது யூகிக்க முடிந்தது. அவள் பாதையின் இரு பக்கங்களிலும் அரவம் பார்த்தாள். வெயிலில் வயல்வெளி தனிமையின் ஆங்காரத்தோடு பூத்துக் கிடந்தது. அவன் யாருக்கும் முகம் தெரியாதபடி கரும்பு வயலின் நுனியில் நின்றுகொண்டிருந்தான். அவள் சட்டென முடிவெடுத்தவளாய் அவன் நிற்கும் பக்கம் பார்த்தபடி நடந்தாள். அவன் உடலும் மனமும் சந்தோஷத்தில் பதைக்கத் தொடங்கின.

அவ்விஷயத்தில் அவளுக்குப் படிந்துபோயிருந்த அனுபவம் அவனைப் பார்த்து எடைபோட்டுக்கொண்டிருந்தது. வெப்பமுற்ற வயலில் அவளால் அதிக நேரம் இருக்க முடியாது என்பதை உணர்த்துபவளாய்ப் பேசி உடனே அவன் உடலுறவு முடிய வழி கொடுக்கத் தொடங்கினாள். அவன் அதைத் தாண்டி அவளது உடலைப் பார்க்கும் ஆவல் பெருகியவனாய்த் தீவிரம் தெறிக்கும் முகத்துடன் வியர்வை சொட்டப் பொத்தான்களை விடுவித்து அவள் மார்புகளைப் பார்த்தான். அவள் அவன் குறியைப் பிடித்துத் தனக்குள் சேர்த்தபோது பொருட்படுத்தாதவனாய் அவள் மார்புகளைத் தடவிப் பார்த்தான். நினைவில் பதிய வைத்துக்கொள்வதுபோல் உற்றுப் பார்த்துக்கொண்டிருந்தான். ஏற்றம் குறையாத மார்புகளின் ஒரு கரத்தில் அடங்காத வளமை அவன் காமத்தைப் பெருக்கியது. மாமிசம் கவ்வும் விலங்கைப்போலச் சட்டெனக் குனிந்து சுவைத்தான்.

அவன் கட்டுப்படுத்த முடியாதவனாய் இயங்க ஆரம்பித்தான். எல்லாமும் அவன் பெண்ணுடலை அறிந்துகொள்ளும் மனப்பதிவின் தோரணையிலேயே இருப்பதை உணர்ந்தாள். அவன் அப்படி உற்றுப் பார்ப்பது அறிதலுக்காகத்தான் எனும்போது அவன்மேல் சில எண்ணங்கள் ஓடின. அதைக் கேட்க வேண்டாம். ஆண்களுக்குப் புதிதா என்ன என்று கம்மென்றிருந்துவிட்டாள்.

அவனே பொருத்திக் கொண்டு இயங்கத் தொடங்கினான். குறி இறுக்கத்தை விரும்பித் தளர்வாக அணுக விடாமல் லேசாகத் தொடைகளை இணைத்து அவள் இறுக்கம் காட்டினாள். அவன் குறி அழுத்தத்துடனும் இறுக்கத்துடனும் செல்வதை இருவரும் உணர்ந்தார்கள். அவன் அவள் மார்புகளைப் பார்த்தவாறே இயங்கினான். நான்கைந்து உந்தல்களிலேயே உச்சம் வந்தவனாய்த் தடுமாறி அவள் மேல் கவிழ்ந்தான். அவள் யூகித்தது சரிதான் என்றாலும், "இதுதான் முதல் தடவையா?" என்றாள். அவன் சிரித்துக் கொண்டே இசைவாய்த் தலையாட்டினான். "பொய் சொல்லாதே" என்றாள். அவள் தலையில் அடித்துச் சத்தியம் செய்தான். "இன்னொரு முறை வேண்டுமானால் செய்துகொள். இனிமேல் வரக் கூடாது" என்றாள். அவன் போதும் என்று கூறிக் கூச்சத்துடன் நெளிந்தான். சில வினாடிகளில் அவனைச் சட்டென மேலேற்றி இயங்கக் கூட்டினாள். ஆவேசப்பட்ட இயக்கத்தில் உற்சாகமாய் இயங்கினான். அவள் அவன் உடலைப் பிடித்து நிதானமாக இயக்கத்தைச் சீராக்கினாள். அவனும் அவ்வாறே இயங்கினான். இருவருக்குமான திருப்தியில் இருவரும் கட்டிப் பிடித்துக்கொண்டார்கள். டிங்கு பாவம். அவனுக்குத் திருமணம் ஆகும்வரை வேறு எந்தப் பெண்தான் அவனை விரும்பிப் புணர்ச்சியில் சேர்த்துக் கொள்வாள் என்று நினைத்தாள். இதை அவனும் இரண்டாம் உடலுறவின் போது உணர்ந்திருந்தான்.

அவனும் அவளுடன் கூலி வாங்க வருவதாகக் கெஞ்சினான். அவன் வரும்போது யாரும் பெரிதாக எடுத்துக்கொள்ளப்போவதில்லை என்று நினைத்தாள். அம்மா இல்லாத பிள்ளை என்று வேறு பரிதாபம் பார்த்தாள்.

அவள் கூலிக்காக அவனுடன் சென்று களத்தில் காத்திருந்தபோது ஆண்கள் அவளிடம் மாறிமாறிப் பேச்சுக் கொடுத்தார்கள். எல்லோருமே அவளைப் புணர்வது பற்றியோ அல்லது மற்றவர்களைப் புணர்ச்சிக்கு ஏற்றுக்கொள்வது பற்றியோ அல்லது பொதுவான புணர்ச்சி பற்றியோதான் மறைமுகமாகப் பேசி முடித்தார்கள். அன்னத்திற்கு அவர்களது பேச்சின் சாரம் தெரியும். அவள் நேர்க்கோட்டில் நின்றுதான் பார்த்தாள்; பேசினாள். அவர்களுடன் இங்கேயே படுத்துக் கொண்டால் அவர்களுக்குப் பரம சந்தோஷம். மேலும் இந்த வெட்டி நியாயம் எதுவும் பிறகு பேசப்படப்போவதில்லை என்று நினைத்தவுடனேயே அவளுக்குத் தன் நடத்தை மீதான ஆசுவாசமும் விடுதலையுணர்வும் ஏற்பட்டன.

## 2

லலிதா மரப்பாலத்தின் வழி சைக்கிளை விட்டு இறங்கி நெட்டிக்கொண்டு வருகிறாள். மரப்பாலம் சைக்கிளையும் அவளையும் தாங்கித் திமிர் முறித்துக்கொள்கிறது முனகியபடி. படித்துறைப் படிக்கட்டுகள் யாருமற்று அவளைப் பார்த்துக் கொண்டிருக்கின்றன. அப்படிக்கட்டு நீர்நிலையிலிருந்து அவள் வீட்டுக்கு ஏறிவரும் வழிபோலவே இருக்கிறது. பல்வேறு முகச் சாயலும் அசட்டுச் சிரிப்புமாய் அவளைப் பற்றி இழுத்துத்தான் பார்க்கிறது.

சைக்கிளை நிறுத்திவிட்டுப் பூட்டிக் கிடக்கும் வீட்டைத் திறக்கின்றாள். கிழவனின் ஞாபகம் வந்து திரும்பிப் பார்க்கிறாள். அவன் எழுந்து உட்கார்ந்து பார்த்துக்கொண்டிருக்கிறான்.

அவளை அறியாமலேயே அவன் இருப்பு அவளைப் பரிசோதிப்பதுபோலவே அவன் நினைவு அவ்விடத்தை நிரப்பிக் கொண்டு நிற்கிறது. அவனால்தான் அவள் சைக்கிளில் வீடுவந்து இறங்காமல் பாலத்தின் அம்முனையிலேயே இறங்கிக் கொள்கிறாள். திறந்த வீட்டின் வெறுமை அம்மாவை நினைவுக்குக் கொண்டுவந்து அலுப்பேற்றுகிறது. கதவைத் திறந்து போட்டுச் சிறிது நேரம் படிக்கட்டிலேயே உட்கார்ந்திருக்கிறாள். ரோட்டில் ஒரு புல்லட்டில் நான்கு பேர் நெருக்கியடித்துச் செல்கிறார்கள் படபடக்கும் சப்தத்துடன். அவளுக்குச் செல்வத்தின் ஞாபகம் வருகிறது. செல்வத்தின் புல்லட் நிறம் கறுப்பு. அருகிலுள்ள டவுனில் எலக்ட்ரிக்கல் கடை வைத்திருக்கிறான். அவளைப் பார்க்க அடிக்கடி பகிரங்கமாக வீட்டுக்கு வந்துபோய்க்கொண்டிருக்கிறான். அவன் தன்னைத் திருமணம் செய்துகொள்ளும் கற்பனைக்குள் அவளை வளர்த்துவிட்டிருக்கிறான். பூசிய முகமும் வடிவமான உடலும் ஆண் துணையற்ற வீடும் அவனது ‘காதலை’ப் பெருக்கிக்கொண்டிருக்கின்றன. அன்னம் எச்சரிக்கவும் இல்லை. ஊக்கப்படுத்தவுமில்லை. அவ்விஷயம் அதன் போக்கின் போய்ச்சேரட்டுமென விட்டுவிட்டாள். இவ்விஷயத்தில் முடிவுகள் விருப்பமான கற்பனைகளில் மோதிச் சுழலும்போதெல்லாம் கடைசியாக அவளது சாமர்த்தியம் என்று விட்டுவிடுகிறாள்.

லலிதா தையல் பள்ளிக்குப் போகும் வழியில் அவனது கடை இருக்கிறது. கடைத்தெருவை அலற வைத்தபடி சினிமாப்பாட்டு ஒலித்துக்கொண்டிருப்பது அவன் இருப்பு. புகை பிடித்தபடி அவள் வரும் நேரத்தில் ஒருக்களித்து நிற்கும் புல்லட்டில் சாய்ந்துகொண்டு பார்த்துச் சிரிப்பான். அவளுக்கு அவனைப் பிடித்திருக்கிறது. ஆனால் தன் அம்மாவின் நடத்தைகளாலேயே தன்னை அவனிடம் ஒப்புவிக்கத் தயங்கிக் கொண்டிருக்கிறாள். ஆண்கள், அந்த விஷயம் மட்டும் நடந்துவிட்டால் இடத்தைக் காலி செய்துவிடுவார்கள் என்று முழுமையாக நம்பிக்கொண்டிருக்கிறாள். அதுவும் தனது குடும்பப் பிராது இவ்வூரில் அம்பலம் ஏறாது எனவும் தெரிந்து வைத்திருக்கிறாள். அவன் பேச்சையும் போக்கையும் அவளால் முழுதாகப் புரிந்துகொள்ள முடியவில்லை என நெருக்கமான தோழிகளிடம் கூறிவருகிறாள். ஒரு நேரம் அவளுக்காகவே காத்திருப்பது போலவும் சில சமயம் வேற்றாள்போல் பேசிவிடுவதாகவும் கூறுகிறாள். அக்குழப்பங்களைப் பற்றி அவனிடம் பேசிவிடத் தைரியம் எதுவும் வரவில்லை. அவன் தன்னைப் பார்க்க வருவதே பெருமையாகவும் சந்தோஷமாகவும் இருக்கிறது அவளுக்கு. புல்லட் வரும் சப்தம் தெருவுக்கு லலிதாவின் ஞாபகத்தைத்தான் எழுப்பிவிடுகிறது. செல்வம் சாலாக்குக்காரன் என்றார்கள் சில பொம்பிளைகள். கல்யாணத்திற்கு முன்பு எங்கு சுற்றி வந்தால் என்ன, குடும்பம் என்று ஆனபின்பு ஊர் மேயாமல் இருந்தால் சரிதான் என்கிறாள் லலிதா. அவளுக்கும் ஆணுலகம் பற்றி அவள் அம்மாவைப் போலச் சில கணக்குகள் இருக்கின்றன. அக்கணக்குகளின்படி அவள் இயற்றிக்கொண்ட சட்டங்கள் தாம் தையலை ஒழுங்காகவும் தீவிரமாகவும் கற்றுக்கொள்வதற்கும் ஆண்களிடம் எல்லையோடு தன் பேச்சை வகுத்துக்கொள்வதற்கும் துணை புரிகின்றன. ஒருமுறைகூட அவனுடன் அவன் வருந்தி அழைத்த பிறகும்கூடத் தனியாக சினிமாவுக்குச் சென்றதில்லை. பெண்கள் கூட்டம் கிளம்பும் பேச்சுத் தட்டுப்படும் நாளிலிருந்து தேதி அறிவித்து அவனை அங்கு வரவழைப்பாள். அவனும் வேறு வழியின்றித் தன் நண்பர்களுடனோ தனியாகவோ வருவான். டிக்கெட் எடுத்துத் தரும் வேலைகள் முடிந்து உள்ளே சென்றதும் அவள் பெண்களுடனும் அவன் ஆண்களுடனும்தான் அமர முடியும். இப்படி அவன் வருகையையும் தன் நடத்தையையும் பகிரங்கப்படுத்துவதன் மூலமாகவே அனைவருக்கும் அவள் தெரிவிப்பது அவள் அம்மாவின் நடத்தைகளைத் தன்னோடு ஒப்பிட்டுப்

பார்க்க வைப்பதும் அனைவரையும் தங்கள் காதலின் சாட்சியங்களாக ஆக்கிக்கொண்டிருப்பதும்தான்.

வயல்வேலைகளுக்குச் சென்றிருக்கும் அன்னத்திற்குச் சோறு எடுத்துக்கொண்டு செல்லும் வடக்குவெளிக் காட்டுப்பாதையில் செல்வம் எத்தனையோ முறை மறித்தும் சிரித்தும் பேசியிருக்கிறான். அவள் அந்நேரத்தில் இப்படி நடந்துகொள்வதற்காக அவனை வெறுத்துவிடவில்லை. மிகவும் விரும்புகிறாள். தன் உடல் பற்றியும் அழகு பற்றியும் அப்போதைய பிரக்ஞை அவளுக்குத் திமிறிய சந்தோஷத்தைத் தருகிறது. ஆனாலும் சிரித்தபடியே மறுத்துக் கடக்கிறாள். பலமுறை திரும்பிப் பார்த்துச் செல்கிறாள். அப்போது அவள் விழிகளில் மின்னும் காமம் சொல்லிச் செல்வதெல்லாம் அவள் அவளையே பொக்கிஷமாக வைத்திருப்பது போலவும் அது அவனுக்காக மட்டுமே என்பது போலவும்தான் இருக்கிறது.

லலிதாவை அன்னத்தோடு ஒப்பிட்டுப் பார்த்துப் புகந்து கொண்டுதானிருக்கிறார்கள். அதே சமயம் அன்னத்தை யாரும் கீழ்த்தரமாக நடத்திவிடவில்லை. ‘ரெண்டாளம் கெட்டவள்’ என்றுதான் வகைப்படுத்தி வைத்திருக்கிறார்கள். “அடிச்சிட்டு அள்ளிக் குடுத்தா வாங்கித் திம்பா” என்கிறாள் பிச்சையம்மாள். அவள் எந்தப் புருஷன்மாரைப் பற்றியும் எந்தப் பெண்களிடமும் துப்புக் கொடுத்தது கிடையாது என்கிறார்கள் விவரம் தெரிந்த பெண்கள். அவள் நடத்தைகளை விவரிக்கும் போதே பெண்ணுலகத்தின் சிரிப்புக் கதைகளின் வகைகளில்தான் அவை வெளிவருகின்றன. ஆனால் அவள் ஆன்களிடம் பலரது கதைகளைப் புட்டுப் புட்டு வைக்கிறாள். ஆண்கள் சிரித்துக்கொள்கிறார்கள். விருதாங்க நல்லூரிலிருந்து செட்டியாரின் வேலைக்காரன் ஒருவன் அவரது நிலத்தைப் பார்த்துக்கொள்ள வந்துபோய்க்கொண்டிருந்தான். அவன் கொஞ்ச நஞ்சமல்ல நிறையவே கூச்ச சுபாவியாக இருந்தான். அவளே அவனிடம் சாடைமாடையாகவும் பிறகு நேரிடையாகவும் பேசியும் அவன் வராது சலித்துத்தான் போனாள். இதோடு தொலையட்டும் என்று அவளும் அப்படிப் பேசுவதை ஓர் எல்லையோடு நிறுத்திக்கொண்டு பொது உரையாடல்களைத் தொடங்குவாள். அவன் விடாமல் காமம் சொட்டப் பார்க்கத் தொடங்குவான். அது அவளுக்கு ஆரம்பத்தில் எரிச்சலாக இருந்தது. ‘இந்த கேஸ் இப்படித்தான்’ என்று ‘சொல்’ கொடுத்துவிட்டுச் சிரிக்கத் தொடங்கிவிட்டாள். காமம் சொட்ட நான்கு பார்வைகள்; காதலிப்பதுபோல் சில பேச்சும் பார்வைகளும் சில அசட்டுச் சிரிப்புகளும்; தூரத்தில் மறையும்போது ஒரு சில திரும்பிப் பார்த்தல்கள். அவ்வளவுதான் அவனது தொடர் நடவடிக்கைகள். இது ஒருவகை என்று அவளும் அவனுக்குத் தோதாகத் திரும்பச் செய்துகொண்டிருந்தாள்.

ஒருநாள் வயலில் அவள் செட்டியாருக்காகக் காத்துக் கொண்டிருந்தபோது திடுமென அவள்முன் வந்து நின்றான். அவனைப் பிறகு வரும்படி கூறினால் அதோடு முடிந்தது கதை. செட்டியார் வருவதற்குள் அவனை அனுப்பிவிட முடியுமென்று அவனுடன் இருக்கத் தொடங்கினாள். அவன் செய்கைகள் அனைத்தும் குழந்தையின் சேட்டைகள் போலவே இருந்தன. செட்டியார் குறிப்பிட்ட நேரத்திற்கு முந்தியே வருவார் என்று அவள் எதிர்பார்த்திருக்கவில்லை. அக்கோலத்தில் அவனைப் பார்த்ததும் அவர் திரும்பி நடக்க ஆரம்பித்து விட்டார். அவளுக்குச் சிரிப்புதான் வந்தது. அவன் உடைகளைச் சரிசெய்துகொண்டு பள்ளிக்கூடப் பிள்ளை பிராது கூறி

அழுவதுபோல், “இதுக்குதான் நான் வர்லேன்னது” என்று அழுதான். அவள் வாய்விட்டுச் சிரித்துக்கொண்டிருந்தாள்.

## 3

அன்னம் தன் மகள் உறங்குவதற்காகக் காத்துக்கொண்டிருக்கிறாள். லலிதா புரண்டு படுப்பதும் உறங்காதிருக்கும் அம்மாவைப் புரிந்துகொண்டு உறங்காமலிருக்க முயற்சிப்பதுமாய் இருக்கிறாள். விளக்குகள் அணைந்து தெருவே தூக்கத்தில் மிதக்கத் தொடங்கிவிட்டதை அறிந்து அன்னத்தின் மனம் லேசாகப் பதைத்துக்கொண்டிருந்தது. லலிதாவின் உறக்கம் அல்லது உறங்குவதுபோன்ற ஒரு நடிப்பையாவது எதிர்பார்த்துக்கொண்டிருந்தாள். லலிதா தனது தூக்கமின்மையால் மட்டுமே அம்மாவைப் பிடித்து நிறுத்த முடியுமென்று நினைத்துப் பிடிவாதமாகத் தூக்கமின்மையை நாசுக்காகத் தெரிவித்துக்கொண்டிருக்கிறாள். ‘அவர்’ அவளைக் கூப்பிடுவார் என்று அவள் எதிர்பார்த்திருக்கவில்லை. ஊரில் வசதியான குடும்பங்களின் வரிசையில் முக்கியமான மற்றும் மிக கௌரவமான நடத்தையுள்ள மனிதராக மதிக்கப்படுகிறவர்களில் அவரும் ஒருவர். மதிய வெயிலில் அன்னம் கடைத் தெருப்பக்கம் போனபோது அவர் கறிக்கடையில் உட்கார்ந்து பேப்பர் படித்துக்கொண்டிருந்தார். “ஒரு விஷயம் கேட்டுப் போ” என்றுதான் கூப்பிட்டார். சிறிய கடைத்தெரு மதிய வெயில் மயக்கத்தில் குட்டை நிழல்களுடன் காற்றோடிக் கிடந்தது. வாசல் பக்கம் சென்று பவ்யமாய் ஒதுங்கி நின்றாள். அவர் உள்ளே கூப்பிட்டார். எதுவோ தன்மீது பஞ்சாயத்து என்றுதான் உடனே அவள் மனம் கற்பனை செய்தது. எதுவாயிருந்தாலும் அவரிடமே சரி செய்யச் சொல்லிக் காலில் விழுந்துவிடவும் தயாராக இருந்தது மனம். அவர், கடையில் சரக்கு வாங்கும் தோரணையில், “விசாலம் ஊருக்குப் போயி ரெண்டு வாரமாவுது. ராத்திரி வூட்டுக்கு வந்துட்டுப் போ” என்றார். அவளுக்கு வந்த சிரிப்பை அடக்கிக் கொண்டாள். அச்சிரிப்புக் கூட உடன் எழுந்த சந்தோஷத்தினால் உண்டானதுதான். இவள் சம்மதமாய்த் தலையாட்டினாள். கடை உள்ளே சுற்றும் முற்றும் பார்த்தாள். “யாருமில்லை” என்றார் அவர். சிரித்தபடி திரும்பினாள். “தலை குளிச்சிட்டு வா” என்றார். அவள் திரும்பிப் பார்த்துச் சிரித்தாள். செட்டியார் கடையில் வேண்டுமட்டும் மளிகைச் சாமான்கள் வாங்கிக்கொள்ளச் சொன்னார். அவளுக்கு ஒரு பழக்கம் இருந்தது. அவளுடன் இருப்பதற்கான கூலியாய் எதையும் பெறாமல் நிராகரித்து விடுவது அவர்களின் பகல் நேரப் பார்வைகளின் முன் தன் நடையைக் கம்பீரமாக வைத்துக்கொள்ள உதவுகிறது. இதே உதவியை அவள் கேட்டிருந்தாலோ அவர் வேறு நேரத்தில் கூறியிருந்தாலோ கும்பிடு போட்டு வாங்கியிருப்பாள். அவள் சிரித்தபடியே சென்றுவிட்டாள்.

நடுநிசிக்குமேல் நாய்க்குரைப்புச் சப்தத்துடனும் முக்காட்டுடனுடம் அவர் வீட்டுக்குச் சென்றாள். அவர் ஏதோ முதலிரவைக் கொண்டாடுவதுபோல் பழங்களும் மலர்களும் சூழ ஊதிவத்திப் புகையுடனும் கைப் பனியனுடனும் உட்கார்ந்திருந்தார்.அந்தத் தோரணை அவளுக்கு மிகவும் பிடித்திருந்தது. கதவடைக்கப்பட்டவுடன் அவர் கட்டியணைத்தபடி பேசிய வார்த்தைகள் அவள் வாழ்வில் மறக்க முடியாதவை. ஆசை நாயகிபோல் அவள் அவரிடம் நடந்து கொண்டாள்.

அது அவள் பருவத்தையும் பழசையும் மறக்கடித்துக்கொண்டிருந்தது. அவருக்கு அவள் மீதிருந்த ஏக்கங்களையெல்லாம் கடந்த காலத்திலிருந்து எடுத்துப் பேசிக் கொண்டிருந்தார். அவளது மார்புகளைக் காண்பிக்கச் சொன்னார். அவள் மனம் திறந்த புன்னகையுடன் காண்பித்து அவர் ரசிப்பதை ரசித்தாள். ஆசையுடன் தடவிப் பிடித்தார். அவர் கடக்கும்போதெல்லாம் அவள் அண்ணாந்து தலை சிலுப்பிக் கேசத்தைக் கோதிக்கொள்வதுபோலவோ எதன் பொருட்டோ கைகளை எப்படியாவது தலைப்பக்கம் செலுத்தியோ தனது முலைகளின் நிலைத்தன்மையைக் காட்டிக் கொண்டிருப்பதாக அவர் கூறினார். அவள் சிரித்தபடி ஆமாம் என்றாள். “எல்லோரும் பார்க்கிறார்கள். நீங்கள் மட்டுமென்ன?” என்றாள். அவர் வெகு நேரம் சிரித்துக் கொண்டிருந்தார். குறும்பு செய்த பெண்ணைப்போல் உட்கார்ந்திருந்தாள். அவள் மளிகைச் சாமான்கள் எதையும் வாங்கிக்கொள்ளவில்லை என்பதை இரண்டு நாள் கழித்துத்தான் தெரிந்துகொண்டார். அவளைக் கூப்பிட்டுப் பணம் கொடுத்தார். கைப்பிடியில் நூறு ரூபாய்த் தாள்கள் சுருட்டிக்கொண்டு நின்றன. அவள் நெல் அரைப்பதற்கு ஐந்து ரூபாய் சில்லறை கேட்டாள். அவர் வேறு சில்லறை இல்லையென்று நூறு ரூபாயாவது எடுத்துக்கொள் என்றார். அவள் பிடிவாதமாக நின்று ஐந்து ரூபாய்ச் சில்லறை வாங்கிக்கொண்டு காதல் பார்வை பார்த்துக்கொண்டு சென்றாள்.

லலிதா அன்னத்திற்குச் சோறு கொடுத்துவிட்டு கனமற்ற வாளியோடு வீடு திரும்பிக்கொண்டிருக்கும் ஒற்றை நடையைப் பார்த்துக்கொண்டிருக்கிறது காடு. எப்படியும் தனது பிழைப்பிற்குள் குடும்பத்தைக் கொண்டுவந்துவிட வேண்டுமென்று துடியாய் நினைத்துக்கொண்டு நடக்கிறாள் லலிதா. காட்டுப்பாதையின் தனிமையும் அவள் நினைப்பும் அவ்வழிதோறும் ஒன்றுசேர்ந்துகொள்கின்றன. அவள் அப்படியான தனிமையில் இக்காட்டுப்பாதையில் நடந்து வரும்போதெல்லாம் சட்டென இந்நினைவு ஆக்ரமித்துக்கொள்வதை இன்று நினைத்துக்கொள்கிறாள். அவள் ஆடைகள் நடை சரசரப்பில் பேசிக்கொள்வதையும் கொலுசொலி ‘உச்சு’க் கொட்டுவதையும் கேட்டு வருகிறாள். அந்தச் சூழல் அவளுக்குப் பிடித்திருக்கிறது. பயமும் குறுகுறுப்புமாய். இப்படி இந்தக் காட்டில் ஒரு குச்சு வீடு கட்டிக்கொண்டால் என்ன என்று நினைக்கிறாள். ஒவ்வொரு முறையும் அது சந்தோஷத்தைத் தருகிறது. அக்கற்பனையில் அவளுக்குச் சினேகமான தோழிகளும் திருமணமாகி அக்கம் பக்கத்து வீடுகளில் வசித்தார்கள். முக்கியமாக, வெள்ளை நிற நாய்க்குட்டி ஒன்று அவளுடன் ஓடிவருகிறது. அதன் உடல் தன்மையும் மெல்லிய குரைப்பும் இன்பம் தருவதாக இருக்கின்றன. அது அவளிடம் மட்டும் அன்பாக இருக்கிறது. அதைப் பொருட்படுத்தாது விலகி வீட்டினுள் செல்கிறாள். அது அவளை முகர்ந்துகொண்டு அவள் செல்லுமிடமெல்லாம் விளையாடிக் கொஞ்சியபடி அவளுடனே வருகிறது. அந் நாய்க்குட்டி தொடர்ந்து வருவதிலும், தான் அதன் அன்பை பெயருக்குப் புறக்கணித்தபடியே விரும்பி வருவதிலும்தான் அவளது ஆனந்தம் ஒளிந்து கிடக்கிறது. பல சமயங்களில் அதைத் தன்னுடனேயே கட்டிக்கொண்டு உறங்கியும் போய்விடுகிறாள். அப்போது அந் நாய்க்குட்டியும் அவளுக்கு இணையான உறக்கத்தைக்கொண்டிருக்கிறது.

ஒற்றைப் பனைமர வளைவிலிருந்து தூரத்தில் தெரியும் வீடுகளின் கூட்டம் அவளது வீட்டை அவளுக்கு ஞாபகப்படுத்துகிறது. வீட்டை மெழுக வேண்டும். அழுக்குத் துணிகள் சேர்ந்துவிட்டன. இன்று எல்லாவற்றையும் துவைத்துப்போட்டு விட வேண்டும். வெண்ணிறத்தில் சாம்பல் புள்ளிகளும் கறுப்பு பார்டருமான சேலையை மட்டும் இஸ்திரி செய்து வைத்துக்கொள்ள வேண்டும். விசேஷ ஆடை அது மட்டும்தான். செல்வம் வாங்கிக் கொடுத்தது. அவ்வாடை வாங்கியளித்த தினமும் செல்வத்தின் சிரிப்பும் அவளுக்குச் சந்தோஷத்தைத் தருகின்றன. எப்போதும் அந்நினைவு அவளது திருமணத்தில் சென்று மோதி நிற்கிறது. அவன் அந்த வெண்ணிற நாய்க்குட்டி போலவே அவளைப் பின்பற்றிக் கொஞ்சி விளையாடியபடி வந்துகொண்டிருக்கிறான். பழைய தையல் மிஷின் ஒன்று விலைக்கு வருவதை இன்றாவது செல்வத்திடம் சொல்லிவிட வேண்டும். அது மட்டும் அவன் வாங்கிக் கொடுத்தால் போதும். ‘ஓவர்லாக்’ மிஷினைத் தானே சம்பாதித்து வாங்கிக் கொள்ள முடியுமென்று நினைக்கிறாள். அம்மா எதுவும் பேசாது வீட்டுவேலை பார்த்துக்கொண்டு தனக்கு உதவியாய் இருந்தால் போதும்.

அவள் நினைத்ததுபோலும் எதிர்பார்க்காததுபோலும் செல்வம் எதிரில் வந்துகொண்டிருக்கிறான். அவள் நின்றுவிட்டாள். அவன் சிரித்தபடி வந்துகொண்டிருக்கிறான். அவள் முன்னும் பின்னுமாய் மனித அரவம் தென்படுகிறதாவெனக் கவனித்துக்கொண்டு சிரிக்கிறாள். அவன் அருகிலுள்ள சிறு பாதையில் உள்ளே நுழைந்தபடி உன்னிடம் ஒரு முக்கியமான விஷயம் பேச வேண்டுமென்று கூறுகிறான். அவளும் என்றும் போலில்லாது எதுவும் பேசாது உள்ளே நுழைகிறாள். அவன் அவள் அண்மையை ரசித்துச் சிரிக்கிறான். அவள் காரணம் கேட்டாள். அவன் அவளது வனப்பில் திணறும் சுவாசத்துடன் அவளைக் கட்டிக்கொண்டான். அவள் பெயருக்குத் திமிறுகிறாள். அவன் குழந்தையைக் கொஞ்சுவதுபோல் முகத்தை வைத்துக்கொண்டு சிணுங்குகிறான். அவளுக்கு ஆசையாகவும் பயமாகவும் இருக்கிறது. அவள் மௌனமாயிருக்க, உடல் சேர்த்துத் தழுவுகிறான். அவளது மென்மையும் சரும மணமும் அவனைக் கிளர்த்துகின்றன. எப்படிச் சட்டென ஒத்துக் கொண்டாள் என்று நினைத்தபடியே அடுத்த நகர்வுக்குச் சென்றபோதுதான் வெறுமனே கட்டித் தழுவ மட்டுமே முடியும் என்ற முடிவுக்கு வந்தான். அவன் அசைவுகளைக் கரம் பிடித்து நிறுத்தினாள். சில வினாடிகள் கம்மென்றிருந்தாள். எல்லாமும் நின்று செயல்கள் துடிக்கும் மௌனம் கரைகிறது அவ்விடத்தில். அவன் கரத்தைத் தன் மார்பிலிருந்து விலக்கிப் பின்னால் தள்ளுகிறாள். அவன் முரண்டு பிடித்தான். என் மீது நம்பிக்கை இல்லையா என்றான். “எல்லாம் கல்யாணத்துக்கப்புறம்தான்” என்றாள். “அப்போன்னா எம்மேல நம்பிக்கையில்ல” என்றான். “யாருக்கும் தெரிலன்னாலும் பரவால்ல. ஒரு மஞ்சக் கயித்தக் கட்டிட்டு நீ என்ன வேணா செஞ்சிக்க.” அழும் குரலில் உடைந்தாள். அவள் விசும்பலில் அவன் செய்கைகள் நின்று போயின. “எப்போ என்னைக் கல்யாணம் பண்ணிப்ப” என்றாள். அவன் அவள் முகத்தைப் பார்க்கத் திராணியற்று அவளைக் கட்டியணைக்கிறான். கரம் பிடித்து இழுக்கிறான். அவள் சிம்பித் தள்ளிவிட்டுப் புறமுதுகு காட்டி நிற்கிறாள். கழுத்தை முத்தி மார்பைப் பற்றுகிறான். அவள் கரங்களை விலக்கிப் பின்னே தள்ளுகிறாள். தையல் மிஷின் விலைக்கு வருவதைச் சொல்லலாமா வேண்டாமா என்ற குழப்பம் வருகிறது. வேறு நேரத்தில்தான் சொல்ல வேண்டுமென்று

நினைத்துக்கொண்டாள். அவளைப் பின்புறமாகச் சேர்த்து அணைத்து, "இந்த மாசத்தில எங்க வீட்ல சொல்லி ஏற்பாடு பண்றேன்" என்கிறான். அவள் திரும்பி அவ்ன் கண்களைத் தேடிப் பார்க்கிறாள். அவன் சிரிக்கிறான். அவனைக் கட்டிக் கொள்கிறாள். அவளைத் தீண்டியபடி அவன் உடல் உறுப்புகள் உயிர் முளைத்து அலைந்தபடி பரபரக்கின்றன. அவளுக்கு அதன் தீவிரம் தெரிகிறது. அவள் உடல் பதறுவதை அறிகிறாள். ஆண் பிடி. துவள்கிறது உடல். விட்டுவிடுவானென உடல் குறுக்கிக்கொள்கிறான். மிருகம் விழித்தது போல் அவன் செயலில் மீண்டும் மூர்க்கம் கூடுகிறது. சதையைப் பற்றிப் பிசையும் அழுத்தத்தில் வலி ஏறுகிறது. அவள் கண்களாலும் கரங்களாலும் தடுத்துக் கெஞ்சுகிறாள். அவன் எதையும் பொருட்படுத்தாது திறக்க முடியாமல் மூடியிருக்கும் பண்டத்தைப் பிரித்துத் தின்னும் மூர்க்கத்தில் அவளைப் புரட்டுகிறான். காட்டுச் செடிகளும் தனிமையும் அவர்கள் போராட்டத்தைப் பார்த்துக்கொண்டிருக்கின்றன. அவள் திமிறி வெளியேற நினைக்கிறாள். ஆண் பலம். வெளியேற முடியாத வளையத்துக்குள் நுழைந்துவிட்டதுபோல அவள் உடல் திமிறுகிறது மீண்டும் மீண்டும். சட்டென முளைத்த தீவிரம் அவளை அவனிடமிருந்து பிரித்துவிடுகிறது. உதறித் தள்ளி விலகிப் பாதையில் ஓடி நின்றுகொள்கிறாள், உடைகளைச் சரி செய்தபடி. அவன் அவளைக் காட்டினுள் அழைக்கிறான். அவள் உருண்டு கிடக்கும் சோற்று வாளியைக் கேட்கிறாள். அவன் எடுத்து வைத்துக்கொண்டு அவளைக் கெஞ்சுகிறான். அவள் பாதையை முன்னும் பின்னும் பார்த்து மனித அரவத்திற்கு அஞ்சிக் கேட்கிறாள். அவன் பிடிவாதமாகக் காட்டினுள் அழைத்தபடியே இருக்க அவள் அலுத்து நடக்கத் தொடங்கினாள். அவன் வாளியைக் கொடுப்பதாக மீண்டும் மீண்டும் கூப்பிடுகிறான். திரும்பிப் பார்த்தால் ஒரே ஒருமுறையெனக் கெஞ்சுகிறான்.

அவள் தீர்மானமாக வீட்டை நோக்கி நடையைக் கட்டும்போது அவள் முதுகுப் பக்கம் அவளது தூக்குப் பாத்திரம் விழுந்து உருளும் ஓசையில் திரும்பிப் பார்த்தாள். திறந்து கொண்ட வாளி சப்தமெழுப்பி உடலை உருட்டிக் கொண்டு காட்டுப் பாதையில் கிடக்க, எதிர்ப்பக்கம் சென்று கொண்டிருந்தான் அவன். அழுகை எழும்பி வர அடக்கிக்கொண்டபடி வாளியைச் சேர்த்துக்கொண்டு அவன் திரும்பிப் பார்ப்பானென அப்பாதை முடியும்வரை திரும்பித் திரும்பிப் பார்த்துக்கொண்டு நடந்துவந்தாள்.

சாயங்காலம் மௌனமாய் ஊருக்கு மேல் எட்டிப் பார்கிறது. லலிதா வாசற்படியில் நிலைக்கல்போல் யோசனையில் உட்கார்ந்திருக்கிறாள். ஏதேதோ நினைவுகள் முளைத்து வளர்ந்து சோற்று வாளி பாதையில் பிளந்து கிடந்ததில் வந்து முடிந்துகொண்டிருந்தது. தன்னை எப்படியாவது தேற்றிக்கொள்ள வேண்டுமென்றும் தனக்கு இன்னும் மனத் தைரியம் வேண்டுமென்றும் நினைத்துக்கொண்டாள். பயம் வந்துகொண்டிருந்தது. எதை நினைத்து என்றறியாதபடி ஆழத்தில் சிக்கிக்கொண்டிருந்தது. பிடிமானம் நழுவியது போலும் பற்றுக்கோல்கள் அற்றபடியும் தத்தளிப்பாக இருக்கிறது மனம்.

அன்னம் செல்வத்தோடு பேசியபடி வீடு வருவதைப் பார்க்கிறாள் லலிதா. அவன் சிரிப்பான் என்று எதிர்பார்த்தாள். காதலோடும் குறும்போடும் அவனைப் பார்த்தாள். அவன் அவள் அங்கு இருப்பதாகவே கண்டுகொள்ளாமல் நின்றுகொண்டிருந்தான். அன்னம் அவனை வீட்டுக்குள் அழைத்தாள். லலிதா எழுந்து வழிவிட, செல்வம் உள்ளே சென்று ஸ்டூலில் உட்கார்ந்துகொண்டான். லலிதாவுக்குத் தன் கோபத்தைக் காட்ட வேண்டும் போலிருந்தது. உள்ளே சென்று துணிகளை வாரிக்கொண்டு படித்துறைக்கு வந்து விட்டாள்.

துணிகளை நனைத்து வாரிப் போட்டுக்கொண்டு துவைக்கத் தொடங்கினாள். நினைவு தறிகெட்டு ஓடிக்கொண்டிருந்தது. அவனது கோபம் அவளுக்குப் பிடித்திருந்தது. அவளைப் பார்த்து முறைத்திருந்தால் அவள் ஏதாவது பழிப்புக்காட்டியிருப்பாள். துண்டடியான அக்கோபத்தை அவளால் தாங்கிக்கொள்ள முடியவில்லை. கிழவனின் இருமல் சப்தம் கேட்டது. ஆடை சரியாக இருக்கிறதாவென ஒரு தரம் பார்த்துக்கொண்டு அவன் இருக்கும் திசையைப் பார்த்தாள். கொட்டகையில் இருட்டில் எதுவும் தெரியவில்லை.

சிறிது நேரத்திற்குப்பின் அவளுக்குச் சட்டெனக் குறுகுறுப்பாக இருக்க, துவைப்பதை நிறுத்தி நீரள்ளித் துணிகளின் மேல் தெளித்தபடி யோசனையை நீட்டித்தாள். சட்டென வேகம் வந்தவளாய் மெதுவாக எழுந்து வீட்டினுள் சென்றாள். அவள் அம்மா மருகிப் பின்னுக்கு விலகவும் அவன் நெருங்கிப் பிடித்துச் சேர்த்து அணைக்கவும் இருந்ததைப் பார்க்க முடிந்தது. அவள் ஏதோ ஒருவகையில் எதிர்பார்த்ததுதான். இந்த அம்மாவுக்கும் ஆண்களுக்கும் விவஸ்தையே இல்லை. அவனை வெளியே துரத்த வேண்டும் போலிருந்தது. இனி உனக்கும் எனக்கும் எந்த உறவும் கிடையாது; என்னைத் தேடிக்கொண்டு இங்கே வரவே கூடாது என்று சொல்லிவிட வேண்டும் என்று நினைத்தாள். வெளியே வரட்டும். அவன் உடனே வந்துவிடுவான் என்றுதான் நினைத்தாள். அவன் எல்லாவற்றையும் திட்டமிட்டுத்தான் செய்வதாக எண்ணினாள். சக்தியற்றவள்போல் துணிகளை வாரிப் போட்டுக் கும்மத் தொடங்கினாள். அழுகை புரட்டிக்கொண்டு எழுகிறது. வடியும் கண்ணீரைக் கட்டுப்படுத்த முடியவில்லை. அவன் மூஞ்சும் முகரக் கட்டையும். இவள் ஒரு விவஸ்தை கெட்டவள். இவளெல்லாம் ஏன் உயிரோடிருக்க வேண்டும். பஸ்ஸிலோ லாரியிலோ யார் யாரோ அடிபட்டுச் சாகிறார்கள் என்ற நினைப்பு அன்னத்தை நேருக்கு நேராய்த் திட்டும் ஆசுவாசத்தைத் தந்துகொண்டிருந்தது. அவன் வெளியே வந்து நின்று வேறு பக்கம் பார்த்தபடி நிதானமாக மரப்பாலத்தைக் கடந்து போகிறான். அவள் அவனைக் கவனியாது கவனிக்கிறாள். அவன் திரும்பிக்கூடப் பார்க்கவில்லை.

அன்னம் படித்துறைக்கு இறங்கி வருகிறாள். எந்த முகபாவத்தையும் காட்டிவிடக் கூடாத பரபரப்பு லலிதாவுக்குத் தொற்றிக்கொள்கிறது. அன்னம் நீரில் இறங்கி முகம் கைகால் அலம்பியபடி, “இந்த மாசக் கடேசில அவுங்க வூட்ல சொல்லிப் பேசறேன்னு சொல்லிருக்கு” என்றாள் அன்னம். தன் மீதான அவனது தொடுகையில் மகளின் திருமண ஒப்பந்தமும் ஒப்பேற்றப்பட்டிருக்கிறது

என்பது மகளிடம் கூறிவிட முடியாத தடையாக நின்றுகொண்டிருந்தது. இவள் எதுவும் பேசாது துணி அலசிக்கொண்டிருந்தாள். அவள் படிக்கட்டு ஏறி வீட்டுக்குள் சென்றுவிட்டாள்.

துணிகளை உதறிக் காயவைக்கும்போது அன்னம் விளக்கைப் போட்டுவிட்டுக் கடைத்தெருப் பக்கம் சென்றுவருவதாகக் கூறிச் சென்றாள். இருள் கூடிக்கொண்டு வந்தது. பெயர்ந்து கிடக்கும் மண்தரை. எரிச்சலாக வருகிறது லலிதாவுக்கு. நாளை மெழுகிக்கொள்ளலாம் என்ற எண்ணம் தரும் சமாதானம் போதுமானதாக இல்லை. வாசற்படியிலேயே அமர்ந்திருக்கும் அவளது நிழல் படித்துறைக் கற்களில் நீண்டு துண்டு துண்டாய் மடிந்து இறங்கி மறைகிறது.

எல்லோரும் விளக்கு வைத்து வீட்டுக்குள் சென்று கதவடைத்துக் கொண்டதுபோல் மூடிக் கிடந்தது தெரு. யாரிடமாவது சொல்ல வேண்டும் போலிருந்தது அவளுக்கு. ஆத்திரத்துடன் ஆனால் நிதானமான நடத்தைபோல் கதவடைத்து வெறும் தரையில் சுருண்டுகொண்டாள். எல்லாவற்றையும் அழுது தீர்த்துவிடுபவள்போல் துடைக்காமல் கொள்ளாமல் அழுதுகொண்டிருந்தாள். நெருக்கமான தோழிகள் முகம் நினைவுக்கு வரக் கிளம்பிச் சென்று தங்கிவிட வேண்டுமென்று நினைத்துச் சிறிது யோசித்தாள். அவளுக்குள் கலைந்த அடுக்குகளில் நினைவுகள் குழறி ஓடின. கிழவனும் அம்மாவும் செல்வமும் அருகிலுள்ளவர்களும். யார் யாரோ தடுக்கிப் பேசிச் சென்றார்கள். கவிழ்ந்து படுத்துக்கொண்டாள். செல்வம் நடந்துகொண்டது நினைவுக்கு வந்து அழுத்தம் தந்தது.

படித்துறையில் யாரோ துணி தப்பும் ஓசையும் காறிச் சளி துப்பும் ஓசையும் மாறி மாறிக் கேட்கின்றன. நீரில் குதித்தெழும்பும் நீரடிப்புச் சத்தம் வீட்டை நிரப்புவதுபோல் வந்துகொண்டிருந்தது. மெல்ல எழுந்து படித்துறைச் சத்தங்களுக்கு நடுவே அம்மாவின் பழஞ்சேலை ஒன்றை எடுத்து ஸ்டூல் மேல் ஏறி கழியில் சுருக்கிட்டாள். ஆண் துணையற்ற அவ்வீட்டின் தனிமையை உடைப்பதாகவோ மறந்துவிடுவதாகவோ தன்னை ஏதோ ஒரு புள்ளியில் அலட்சியமாக சமன்செய்துகொண்டாள். அவ்வூர் ஏதோ ஓர் ஓரவஞ்சனை நீதியைப் புகட்டுவதான எண்ணம் அவள் செயலைத் தீவிரப்படுத்தியது. கழுத்தைச் சுருக்கில் நுழைத்து உடல் எடையைச் சேலை முடிப்புக்குள் மெல்லத் தக்கவைத்துத் தொங்கிப் பார்த்தாள். சில வினாடிகள் ஸ்டூலில் ஆதரவாகக் கண் மூடி நின்றுகொண்டிருந்தாள். கடந்துகொண்டிருந்த வினாடிகளில் ஒன்றில் சட்டென ஸ்டூலைக் கால்களால் தள்ளிவிட்டாள். சாவின் கணத்தை உணர்ந்தவளாய் அவள் கைகள் மேலே செல்லப் பரபரத்தன. அவள் கழுத்து இறுகுமுன் யாரோ கதவு திறந்து கத்திக் கூப்பாடு போடுவதுபோலும் அவள் கால்கள் பிடித்து உயர்த்தப்பட்டுக் காப்பாற்றப்பட்டு விடுவது போலும் தாமதமான எண்ணங்கள் வந்துபோயின. இன்னும் சில வினாடிகளில் கதவு தட்டப்படப்போகிறது என்று தீர்மானமாக நம்பிக்கொண்டு சமனமில்லாமல் தொங்கிச் சுழன்றுகொண்டிருந்தாள். கண்கள் மிரள் நீர் கோர்த்துக்கொண்டது. வாழ்நாளில் அனுபவித்திராத இருமல் எழும்பித் தொண்டையை அடைத்தது. தனக்குள் எழும் குறட்டைச் சத்தம்போல் தெரியும் குரல் குழறியது. அவளது மங்கலான

கற்பனையில் எல்லோரும் அவளுக்காக அழுது கொண்டிருந்தார்கள். அன்னத்தைக் கரித்துக்கொட்டினார்கள். செல்வம் மூலையில் நின்று அழுதுகொண்டிருந்தான். கறுப்பேறிய கூரை அவள் விழிகளையும் துருத்தி வெளிவரும் நாவையும் பார்த்துக் கொண்டிருந்தது. கடைசியாக கூரையிலிருந்து கீழே விழுந்து கிடக்கும் ஸ்டூலைப் பார்க்க முயற்சித்தாள். மீண்டும் கைகளை மேலுயர்த்திப் பிடி தளர்த்திக் கொண்டுவர எண்ணியபோது ஏதோ ஓர் அடையாளமற்ற கௌரவம் அவளைத் தடுத்துக்கொண்டிருந்தது.

யாருமற்ற அவள் வீட்டு வாசலில் சாவைப் பற்றி நினைத்திராத சமயத்தில் துவைத்துக் காயவைத்த ஆடைகள் ஈரத்துடன் காற்றில் படபடத்துக்கொண்டிருந்தன.

எப்படியும் இந்த மாதக் கடைசியில் செல்வம் லலிதாவைப் பெண்கேட்டு வரப்போகும் செய்தியைத் தெரு முழுக்கப் பரவவிட்டுத்தான் அன்னம் வீட்டுக்கு வருவாள். அவளுக்கு இதைவிடப் பெரிதான் சந்தோஷம் வேறு என்ன இருக்க முடியும்?

______________

**(1) ஒரு போகம் முடிந்த கரும்பு வயல்கள் அடுத்த முறை தாமாகவே முளைப்பது.**

# கன்னிமை - கி. ராஜநாராயணன்

சொன்னால் நம்பமுடியாதுதான்! நாச்சியாரம்மாவும் இப்படி மாறுவாள் என்று நினைக்கவேயில்லை.

அவள் எனக்கு ஒன்றுவிட்ட சகோதரி. நாங்கள் எட்டுப்பேர் அண்ணன் தம்பிகள். 'பெண்ணடி'யில்லை என்று என் தாய் அவளைத் தத்து எடுத்துத் தன் மகளாக்கிக் கொண்டாள்.

அம்மாவைவிட எங்களுக்குத்தான் சந்தோஷம் ரொம்ப. இப்படி ஒரு அருமைச் சகோதரி யாருக்குக் கிடைப்பாள்? அழகிலும் சரி, புத்திசாலித்தனத்திலும் சரி அவளுக்கு நிகர் அவளேதான்.

அவள் 'மனுஷி'யாகி எங்கள் வீட்டில் கன்னிகாத்த அந்த நாட்கள் எங்கள் குடும்பத்துக்கே பொன் நாட்கள்.

வேலைக்காரர்களுக்குக்கூட அவளுடைய கையினால் கஞ்சி ஊற்றினால்தான் திருப்தி. நிறைய்ய மோர்விட்டுக் கம்மஞ்சோற்றைப் பிசைந்து கரைத்து மோர் மிளகு வத்தலைப் பக்குவமாக எண்ணெயில் வறுத்துக் கொண்டுவந்து விடுவாள். சருவச் சட்டியிலிருந்து வெங்கலச் செம்பில் கடகடவென்று ஊற்ற, அந்த மிளகு வத்தலை எடுத்து வாயில் போட்டு நொறு நொறுவென்று மென்றுகொண்டே, அண்ணாந்து கஞ்சியை விட்டுக்கொண்டு அவர்கள் ஆனந்தமாய்க் குடிக்கும்போது பார்த்தால், 'நாமும் அப்படிக் குடித்தால் நன்றாக இருக்கும்போலிருக்கிறதே!' என்று தோன்றும்.

ஒரு நாளைக்கு உருத்த பச்சை வெங்காயம் கொண்டுவந்து 'கடித்துக்' கொள்ள கொடுப்பாள். ஒரு நாளைக்குப் பச்சை மிளகாயும், உப்பும். பச்சை மிளகாயின் காம்பைப் பறித்துவிட்டு அந்த இடத்தில் சிறிது கம்மங்கஞ்சியைத் தொட்டு அதை உப்பில் தோய்ப்பார்கள். உப்பு அதில் தாராளமாய் ஒட்டிக்கொள்ளும். அப்படியே வாயில் போட்டுக்கொண்டு கசமுச என்று மெல்லுவார்கள். அது, கஞ்சியைக் 'கொண்டா கொண்டா' என்று சொல்லுமாம்! இரவில் அவர்களுக்கு வெதுவெதுப்பாகக் குதிரைவாலிச் சோறுபோட்டு தாராளமாஅ பருப்புக்கறி விட்டு நல்லெண்ணெயும் ஊற்றுவாள். இதுக்குப் புளி ஊற்றி அவித்த சீனியவரைக்காய் வெஞ்சனமாகக் கொண்டுவந்து வைப்பாள். இரண்டாந்தரம் சோற்றுக்குக் கும்பா நிறைய ரஸம். ரஸத்தில் ஊறிய உருண்டை உருண்டையான குதிரைவாலிப் பருக்கைகளை அவர்கள் கை நிறைய எடுத்துப் பிழிந்து உண்பார்கள்.

வேலைக்காரர்களுக்கு மட்டுமில்லை, பிச்சைக்காரர்களுக்குக்கூட நாச்சியாரம்மா என்றால் ‘குலதெய்வம்’தான். அவளுக்கு என்னவோ அப்படி அடுத்தவர்களுக்குப் படைத்துப் படைத்து அவர்கள் உண்டு பசி ஆறுவதைப் பார்த்துக்கொண்டிருப்பதில் ஒரு தேவ திருப்தி.

அவள் வாழ்க்கைப்பட்டு, புருஷன் வீட்டுக்குப் போனபிறகு எங்கள் நாக்குகள் எல்லாம் இப்போது சப்பிட்டுப் போய்விட்டது. உயர்ந்த ஜாதி நெத்திலியைத் தலைகளைக் கிள்ளி நீக்கிவிட்டுக் காரம் இட்டு வறுத்துக் கொடுப்பாள். இப்போது யாருமில்லை எங்களுக்கு. அந்தப் பொன்முறுவல் பக்குவம் யாருக்கும் கைவராது. பருப்புச்சோற்றுக்கு உப்புக்கண்டம் வறுத்துக் கொடுப்பாள். ரஸ சாதத்துக்கு முட்டை அவித்துக் காரமிட்டுக் கொடுப்பாள். திரண்ட கட்டி வெண்ணெயை எடுத்துத் தின்னக் கொடுப்பாள், அம்மாவுக்குத் தெரியாமல்.

அவள் அப்பொழுது எங்கள் வீட்டிலிருந்தது வீடு நிறைந்திருந்தது. தீபம்போல் வீடு நிறைஒளி விட்டுப் பிரகாசித்துக்கொண்டிருந்தாள்.

மார்கழி மாசம் பிறந்துவிட்டால் வீட்டினுள்ளும் தெருவாசல் முற்றத்திலும் தினமும் வகை வகையான கோலங்கள் போட்டு அழகுபடுத்துவாள். அதிகாலையில் எழுந்து நீராடி திவ்யப்பிரபந்தம் பாடுவாள். இப்பொழுதும் பல திருப்பாவைப் பாடல்களை என்னால் பாராமல் ஒப்புவிக்கமுடியும். சிறுவயசில் அவளால் பிரபந்தப் பாடல்களைப் பாடக் கேட்டுக்கேட்டு எங்கள் எல்லோர்க்கும் அது மனப்பாடம் ஆகிவிட்டது.

அப்பொழுது எங்கள் வீட்டில் மரத் திருவிளக்கு என்று ஒன்று இருந்தது. அது அவ்வளவும் மரத்தினாலேயே ஆனது. தச்சன் அதில் பல இடங்களில் உளிகளைப் பதித்து நேர்கோடுகளால் ஆன கோலங்களைப் போட்டிருந்தான். மொங்காங்கட்டையின் வடிவத்தில் நிற்கும் பெரிதான பற்கள் இருக்கும். அதில் உயரத்துக்குத் தகுந்தபடி ஏற்றவும் இறக்கவும் வசதியாக இருக்கும்படியாக ‘ட’ வடிவத்தில் ஒரு துளையிட்ட சக்கையில் ‘சல்ல முத்த’ என்று சொல்லப்படும் மாட்டுச்சாண உருண்டையின் மீது மண் அகல்விளக்கு வைக்கப்பட்டு எரியும். சாணி உருண்டை தினமும் விளக்கு இடும் போதெல்லாம் மாற்றிவிட்டுப் புதிதாக வைக்கப்படும். அப்புறம் x மாதிரி ஒரு போர்வைப் பலகை கொண்டு இரவு வெகு நேரம் வரைக்கும் பெண்கள் புடைசூழ இவள் உரக்க ராகமிட்டு வாசிப்பாள். வாசித்துக்கொண்டே வரும்போது இவளும் மற்றப் பெண்களும் கண்ணீர் விடுவார்கள். கண்ணீரைத் துடைத்துக்கொண்டே தொண்டை கம்மத் திரும்பவும் ராகமிட்டு வசனத்தைப் பாடுவாள். அவர்கள் கண்ணீர் விடுவதையும் மூக்கைச் சிந்துவதையும் நான் படுக்கையில் படுத்துக்கொண்டு பேசாமல் இந்தக் காட்சிகளையெல்லாம் பார்த்துக் கொண்டேயிருப்பேன்.

அவள் வாசிப்பதை என் காதுகள் வாங்கிக்கொள்ளாது. என் கண்களே பார்க்கவும் செய்யும்; ‘கேட்க’வும் செய்யும்.

விளக்கின் ஒளியில்தான் அவள் எவ்வளவு அழகாகப் பிரகாசிக்கிறாள். அழகுக்கும் விளக்கின் ஒளிக்கும் ஏதோ சம்பந்தம் இருக்கிறது. கறிக்கு உப்பைப்போல் அழகுக்கும் அதி ருசி கூட்டுகிறதுபோலும் விளக்கு.

தானாகக் கண்கள் சோர்ந்து மூடிக்கொண்டுவிடும்.

அதிகாலையில் ரங்கையா வந்து என்னை எழுப்பினான். ராமர், லக்ஷ்மணர், சீதை மூவரும் எங்கள் தெருவின் முடிவிலுள்ள கிழக்காகப் பார்த்த ஒரு வீட்டிலிருந்து இறங்கிக் காட்டுக்குப் போகிறார்கள். பார்வதி அம்மன் கோயிலைத் தாண்டி, பள்ளிக்கூடத்தையும் கடந்து, கம்மாய்க்கரை வழியாக அந்த மூவரும் போகிறாள். எனக்குத் தொண்டையில் வலிக்கிறாற்போல் இருக்கிறது. முகத்தைச் சுளிக்க முடியவில்லை. ரங்கையா தோள்களைப் பிடித்துப் பலமாக உலுக்கியதால் விழித்துவிட்டேன். சே! நன்றாக விடிந்துவிட்டிருக்கிறது. ரங்கையா சிரித்துக்கொண்டு நின்றிருந்தான், கிளம்பு கிளம்பு என்று ஜரூர்ப்படுத்தினான்.

நாச்சியாரம்மா செம்பு நிறையத் தயிர் கொண்டுவந்து வைத்தாள், இருவரும் வயிறுமுட்டக் குடித்துவிட்டுக் கிளம்பினோம்.

ரங்கையா எங்கள் மச்சினன்; ‘வீட்டுக்கு மேல்’ வரப்போகும் மாப்பிள்ளை. நாச்சியாரம்மாவை இவனுக்குத்தான் கொடுக்க இருக்கிறோம். இவனும் நாச்சியாரம்மாபேரில் உயிரையே வைத்திருக்கிறான்; அவளும் அப்படித்தான்.

‘புல்லை’யையும் ’மயிலை’ யையும் பிடித்து ரங்கையா வண்டி போட்டான். அவை இரண்டும் எங்கள் தொழுவில் பிறந்தவை. ஒன்று இரண்டு; இன்னொன்று நாலு பல். பாய்ச்சலில் புறப்பட்டது வண்டி. ஊணுக் கம்பைப் பிடித்துத்தொத்தி, அவற்றில் இரண்டைக் கைக்கு ஒன்றாகப் பிடித்துக்கொண்டு குனிந்து நின்றுகொண்டேன். சட்டத்தில் இரும்பு வளையங்கள் அதிர்ந்து குலுங்கிச் சத்தம் எழுப்பியது. வண்டியின் வேகத்தினால் ஏற்பட்ட குலுக்கலில் உடம்பு அதிர்ந்தது. கல்லாஞ்சிரட்டைத் தாண்டி வண்டியின் அறைத் தடத்துக்குள் காளைகள் நிதானங்கொண்டு நடை போட்டன.

நடுவோடைப் பாதையிலுள்ள வன்னிமரத்தருகில் வண்டியை அவிழ்த்து, காளைகளை மேய்ச்சலுக்காக ஓடைக்குக் கொண்டு போனோம்.

காட்டில் பருத்தி எடுக்கும் பெண்கள் காட்டுப் பாடல்கள் பாடிக் கொண்டிருந்தார்கள். அவர்களிடையே நாச்சியாரம்மாவும் நிரை போட்டுப் பருத்தி எடுத்துக் கொண்டிருந்தாள். பருத்தி

‘காடாய்’ வெடித்துக் கிடந்தது; பச்சை வானத்தில் நட்சத்திரங்களைப்போலே. ரங்கையா தன் மடியிலிருந்த கம்பரக் கத்தியால் கருவைக் குச்சியைச் சீவி, பல் தேய்க்கத் தனக்கு ஒன்று வைத்துக்கொண்டு எனக்கு ஒன்று கொடுத்தான். போக இன்னொன்று தயார் செய்து வைத்துக்கொண்டான்!

நேரம், கிடை எழுப்புகிற நேரத்துக்கும் அதிகமாகிவிட்டது. காளைகள் வயிறு முட்டப் புல்மேய்ந்து விட்டு வன்னிமர நிழலில் படுத்து அசைபோட்டுக் கொண்டிருந்தன.

நாச்சியாரம்மா, பருத்தியைக் கருவமரத்து நிழலில் கூறுவைத்துக் கொடுத்துக் கொண்டிருந்தாள். மடிப் பருத்தி, பிள்ளைப் பருத்தி, போடு பருத்தி என்று பகிர்ந்து போட, பள்ளுப் பெண்கள் சந்தோஷமாக நாச்சியாரம்மாவை வாழ்த்திக்கொண்டே வாங்கிச் சென்றுகொண்டிருந்தார்கள். அவர்கள் எங்கள் வீட்டில் வேறு யார் வந்து கூறுவைத்துக் கொடுத்தாலும் ஒப்பமாட்டார்கள். நாச்சியாரம்மாதான் வேணும் அவர்களுக்கு.

கிஸ்தான் தாட்டுக்களில் பகிர்ந்த பருத்தி அம்பாரத்தைப் பொதியாக்கட்டி வண்டியில் பாரம் ஏற்றிக்கொண்டு வீட்டுக்குப் புறப்பட்டோம். பள்ளுப்பெண்கள் முன்கூட்டிப் புறப்பட்டுப் போய் விட்டார்கள் - நாச்சியாரம்மாவும் நானும் வண்டியில் ஏறிக்கொண்டு பருத்திப் பொட்டணங்களின்மேல் உட்கார்ந்துகொண்டு ஊணுக்கம்புகளைப் பிடித்துக்கொண்டோம். ரங்கையா வண்டியை விரட்டினான்.

வருகிற பாதையில் மடியில் பகிர்ந்த பருத்தியோடு நடந்து வருகிற பெண்டுகளின் கூட்டத்தைக் கடந்துகொண்டே வந்தது வண்டி. அவர்கள் வேண்டுமென்று குடிகாரர்களைப்போல் தள்ளாடி நடந்துகொண்டே வேடிக்கைப் பாடல்களைப் பாடிக்கொண்டும் ஒருவருக்கொருவர் கேலிசெய்து தள்ளிக்கொண்டும் வந்தார்கள். தொட்டெரம்மா கோயில் பக்கத்தில் வந்ததும் ரங்கையா கயிறுகளை முழங்கைகளில் சுற்றி இழுத்து வண்டியை நிறுத்தினான். தொட்டெரம்மா கோயிலின் இலந்தைமுள் கோட்டையின்மேல் நாச்சியாரம்மா ஒரு கூறு பருத்தியை எடுத்து இரு கைகளிலும் ஏந்திப் பயபக்தியோடு அந்த முள்கோட்டையின் மீது போட்டாள். பின்னால் வந்துக்கொண்டிருந்த பள்ளுப்பெண்கள் குலவையிட்டார்கள். ரங்கையா கயிற்றை நெகிழ்ந்து விட்டதும் புல்லையும் மயிலையும் வால்களை விடைத்துக்கொண்டு பாய்ந்து புறப்பட்டது.

********

ஊரெல்லாம் ஒரே சலசலப்பு. என்ன ஆகுமோ என்ற பயம். தலையைத் தொங்கப் போட்டுக்கொண்டே வந்து சேர்ந்தான் ரங்கையா. ‘என்ன ஆச்சி?’ என்று அவனைக் கேட்பதுபோல்

பார்த்தோம் யாவரும். அவன் என்னை மட்டிலும் ‘ராஜா, இங்கே வா’ என்று தனியாகக் கூப்பிட்டு விஷயத்தைச் சொன்னான்.

எங்கள் ஊரில், சுந்தரத்தேவன் என்று ஒரு பெரிய போக்கிரி இருந்தான். ஏழுதடவை ஜெயிலுக்குப் போனவன். மூன்று கொலைகள் செய்தவன். அதில் ஒன்று இரட்டைக் கொலை. அவனுடைய மகனை, எங்கள் தகப்பனார் எங்கள் புஞ்சையில் ‘வாங்கித்திங்க’ பருத்திச்சுளை எடுத்தான் என்றதுக்கு ஊணுக்கம்பால் அடி நொறுக்கி எடுத்து விட்டார். பையனைக் கட்டிலில் வைத்து எடுத்துக்கொண்டு வந்து அவனுடைய வீட்டில் கிடத்தியிருக்கிறார்கள். சுந்தரத்தேவன் வெட்டரிவாளை எடுத்துக்கொண்டு வந்து எங்கள் வீட்டை நோக்கிப் புறப்பட்டுக்கொண்டிருக்கிறான். விஷயம் இதுதான். ரங்கையா போய் எவ்வளவு சமாதானம் சொல்லியும் கேட்கவில்லை அவன்.

நாச்சியாரம்மா சுந்தரத்தேவன் வீட்டை நோக்கிப் போனாள். அவள் அங்கு போயிருப்பாள் என்று நாங்கள் முதலில் நினைக்கவில்லை; பிறகுதான் தெரியவந்தது.

அங்கு அவள் போனபோது ஒரே கூட்டம். அழுகைச் சத்தம். நாச்சியாரம்மா நுழைந்ததும் பரபரப்பு உண்டானது. பெண்கள் பணிவாக வழிவிட்டு விலகி நின்றனர். அடிப்பட்ட சிறுவ்னை அந்தக் கட்டிலிலேயே கிடந்த்தியிருந்தது. இரத்த உறவு கொண்ட பெண்கள் ஓவென்று அழுதுகொண்டிருந்தார்கள். சிறுவனின் தாய் கதறியது உள்ளத்தை உலுக்குவதாக இருந்தது. நாச்சியாரம்மா சிலையானாள். அவள் கண்களிலிருந்து தாரை தாரையாக நீர் வடிந்தது. அவள் சுந்தரத்தேவனை ஏறிட்டுப் பார்த்தாள். பின்பு கட்டிலின் சட்டத்தில் உட்கார்ந்தாள். தன் முந்தானையாள் கண்ணீரை ஒத்திக்கொண்டு அச்சிறுவனின் இரத்தம் உறைந்த முகத்தைத் துடைத்தாள். சுந்தரத்தேவன் கட்டிலின் பக்கத்தில் நெருங்கி அரிவாளைத் தரையில் ஊன்றி ஒற்றைக் கால் மண்டியிட்டு உட்கார்ந்துகொண்டு இடது முழங்கையைக் கட்டிலின் சட்டத்தில் ஊன்றி முகத்தில் ஐந்து விரல்களால் விரித்து மூடிக்கொண்டு ஒரு குழந்தைபோல் குமுறி அழுதான்.

நாச்சியாரம்மா சிறுவனை மூர்ச்சை தெளிவித்தாள். வீட்டிலிருந்த புளித்த மோரை வருத்திச் சிறிது கொடுத்துத் தெம்பு உண்டாக்கினாள். மஞ்சணத்தி இலைகளைப் பறித்துக்கொண்டு வரச் சொன்னாள். அதை வதக்கித் தன் கையாலேயே ஒத்தடம் கொடுத்தாள். சுவரொட்டி இலைகளை வாட்டிப் பக்குவப்படுத்திக் காயங்களைக் கட்டினாள். பின்பு வீட்டுக்கு வந்து, பத்துப் பக்கா நெல் அரிசியும், இரண்டு கோழிகளையும் கொடுத்தனுப்பினாள். நாங்கள் ஊமைகளைப்போல் ஒன்றுமே பேசாமல் அவைகளை எல்லாம் பார்த்துக்கொண்டே இருந்தோம்.

எங்கள் தகப்பனாரோ, இப்பொழுதுதான் ஒன்றுமே நடக்காதது போல் தலையில் கட்டிய லேஞ்சியோடு நிம்மதியாக உட்கார்ந்து கொண்டு சுவர்நிழலில் தூரித்தட்டை வீசிக்கொண்டிருந்தார். இடையிடையே வாயில் ஊறும் வெற்றிலை எச்சியை இரண்டு விரல்களை உதட்டில் அழுத்திப்

பதித்துக்கொண்டு பீச்சித் துப்புவார். அது கம்மந்தட்டைகளையெல்லாம் தாண்டித் தூரப்போய் விழும்.

********

எல்லாப் பெண்களையும்போல் நாச்சியாரம்மாவுக்கும் ஒருநாள் கல்யாணம் நிச்சயமானது. அந்தக்காலத்துப் பெண்கள் தங்களுக்குக் கல்யாணம் நிச்சயமானவுடன் அழுவார்கள். அவர்கள் ஏன் அப்படிச் செய்தார்கள் என்று இன்றுவரைக்கும் நான் யாரிடமும் காரனம் கேட்டுத் தெரிந்துகொள்ளவில்லை. ஆனால், அதில் ஒரு 'தேவ ரகஸியம்' ஏதோ இருக்கிறது என்று மட்டும் நிச்சயம். நாச்சியாரம்மாவும் ஒரு மூணுநாள் உட்கார்ந்து கண்ணீர் வடித்து 'விசனம்' காத்தாள்.

வழக்கம்போல் மூன்றுநாள் கல்யாணம். அந்த மூன்று நாளும் அவள் 'பொண்ணுக்கு இருந்த' அழகைச் சொல்லிமுடியாது. கல்யாணம் முடிந்த நாலாம்நாள் அவள் எங்களையெல்லாம் விட்டுப் பிரிந்து மறுவீடு போகிறாள். சுமங்கலிகள் அவளுக்கு ஆரத்தி எடுத்தார்கள். ஆரத்தி சுற்றிக்கொண்டே அவர்கள் பாடினார்கள். அந்தப் பாடலின் ஒவ்வொரு கடேசி அடியும் கீழ்க்கண்டவாறு முடியும்-

**'மாயம்ம லக்ஷ்மியம்ம போயிராவே...'**

**(எங்கள் தாயே லக்ஷ்மி தேவியே போய் வருவாய்)**

அந்தக் காட்சி இன்னும் என் மனசில் பசுமையாக இருக்கிறது. அவளை நாங்கள் உள்ளூரில்தான் கட்டிக்கொடுத்திருக்கிறோம். ஐந்து வீடுகள் தள்ளித்தான் அவளுடைய புக்ககம். அவளுக்கு நாங்கள் விடை கொடுத்து அனுப்புவது என்பதில் அர்த்தமில்லைதான். ஆனால் ஏதோ ஒன்றுக்கு நிச்சயமாக விடை கொடுத்தனுப்பி இருக்கிறோம்.

அந்த ஒன்று இப்பொழுது எங்கள் நாச்சியாரம்மாவிடம் இல்லை. அது அவளிடமிருந்து போயே போய்விட்டது.

## 2

ஆம் அது ரொம்ப உண்மை.

ராஜா அடிக்கடி சொல்லுவான். இப்பொழுதுதான் தெரிகிறது எனக்கு.

நான் நாச்சியாரம்மாவைக் கல்யாணம் செய்து அடைந்து கொண்டேன். ஆனால் அவளிடமிருந்து எதையோ பிரித்துவிட்டேன்.

அவள் இப்பொழுது ரெட்டிப்புக் கலகலப்பாக உண்மையாகவே இருக்கிறாள். என் குடும்பத்தைப் பிரகாசிக்கச் செய்கிறாள். எங்கள் கல்யாணத்துக்கு முன்பு எனக்கு இருந்த நாச்சியாரம்மாள்; இப்பொழுது இருக்கும் என் நாச்சியாரம்மாள்; நான் அந்த அவளைத்தான் மிகவும் நேசிக்கிறேன்.

இப்பொழுது மூணு குழந்தைகள் எங்களுக்கு, தொடர்ந்த பிரசவம். இது அவளைப் பாதித்திருப்பது உண்மைதான். குழந்தைகளையும், குடும்பத்தையுமே சதா கவனிக்கும் சுயநலமி ஆகிவிட்டாள்.

எங்கோ ஓர் இடத்தில் கோளாறாகிவிட்டது. சந்தேகமே இல்லை. ஓய்வு ஒழிச்சலில்லாமல் முன்னைவிடப் பலமடங்கு அவள் இப்பொழுது உடைக்கிறாள். உழைத்து ஓடாய்த் தேய்ந்து வருகிறாள் என்னவள். ஒருநாளில் அவள் தூங்குகிற நேரம் மிகவும் அற்பம். என்ன பொறுமை, என்ன பொறுமை!

குழந்தைக்கு முலையூட்டிவிட்டு விலகிய மாராப்பைக்கூடச் சரி செய்து கொள்ளாமல் தூளியில் இட்டு ஆட்டும் இந்த இவளா அவள்?

ஏகாலிக்கும், குடிமகளுக்கும் சோறுபோட எழுந்திருக்கும்போது முகம் சுளிக்கிறாள். குழந்தைக்குப் பாலூட்டும்போதோ, அல்லது தான் சாப்பிட உட்காரும்போதோ பார்த்துத்தான் அவர்கள் சோறு வாங்கிப் போக வருகிறார்கள் தினமும் என்று புகார் செய்கிறாள். பிச்சைக்காரர்களுக்கு ‘வாய்தாப்’ போடுகிறாள். வேலைக்காரகளின்மேல் எரிந்து விழுகிறாள். ‘அப்பப்பா என்ன தீனி தின்கின்றான்கள் ஒவ்வொருத்தரும்’ என்று வாய்விட்டே சொல்ல ஆரம்பித்துவிட்டாள்.

குடுகுடுப்பைக்காரன் இப்பொழுதெல்லாம் அட்டகாசமாக வந்து எங்கள் தலைவாசலில் வெகுநேரம் புகழ்வதில்லை. பெருமாள் மாட்டுக்காரன் தன் மாட்டுக்கு கம்மஞ்சோற்றையும் பருத்திக்கொட்டையையும் தவிட்டையும் கலந்து வைக்கும் அந்த ‘நாச்சியார்’ எங்கே போனாள் என்று தேடிக்கொண்டிருக்கிறான்.

கல்யாணத்துக்கு முன் நாச்சியாரு, நின்ற கண்ணிப்பிள்ளை சேகரித்து மெத்தைகள், தலையணைகள் தைப்பாள். மெத்தை உறைகளிலும் தலையணை உறைகளிலும் பட்டு நூலால் வேலைப்பாடுகள் செய்வாள். அவள் தனியாக உட்கார்ந்துகொண்டு நிம்மதியாகவும் நிதானமாகவும் யோசித்து யோசித்துச் செய்யும் அந்தப் பின்னல் வேலைகளில், தன் கன்னிப் பருவத்தின் எண்ணங்களையும் கனவுகளையுமே அதில் பதித்துப் பின்னுவதுபோல் தோன்றும். இடையிடையே அவளுக்குள் அவளாகவே குறுநகை செய்து கொள்வாள். சில சமயம் வேலையைப் பாதியில் நிறுத்திவிட்டுப் பார்வை எந்தப் பொருள்பேரிலும் படியாமல் 'பார்த்து'க்கொண்டே இருப்பாள். அப்புறம் நீண்ட ஒரு பெருமூச்சு விட்டுவிட்டு மீண்டும் தையலில் மூழ்குவாள்.

ஒருநாள் நாச்சியாருவின் வீட்டுக்குப் போயிருந்தேன். எனக்கு ஒரு புதிய ஏர்வடம் தேவையாக இருந்தது. அவர்களுடைய வீட்டில் அப்பொழுது களத்து ஜோலியாக எல்லாரும் வெளியே போயிருந்தார்கள். அடுப்பங்கூடத்தை ஒட்டி ஒரு நீளமான ஓடு வேய்ந்த கட்டிடம். அதில் 'குறுக்க மறுக்க' நிறையக் குலுக்கைகள். குதிரைவாலி, நாத்துச்சோளம், வரகு, காடைக்கண்ணி முதலிய தானியங்கள் ரொம்பி இருக்கும். புதிய ஏர் வடங்கள் ஓட்டின் கைமரச் சட்டங்களில் கட்டித் தொங்கவிடப்பட்டிருந்தது. தொங்கிய கயிறுகளுக்கு மத்தியில், மண் ஓட்டில் ஓட்டை போட்டுக் கோர்த்திருந்தார்கள். ஏர்வடத்தைக் கத்தரிக்கக் கயிறு வழியாக இறங்கி மண் ஓட்டுக்கு வந்ததும் எலிகள் கீழே விழுந்துவிடும். ஆள் புழக்கம் அங்கு அதிகமிராததால் தேள்கள் நிறைய இருக்கும். பதனமாகப் பார்த்துக் குலுக்கை மேல் ஏறி நின்றேன். மத்தியான வெயிலால் ஓட்டின் வெக்கை தாள முடியாததாக இருந்தது. தற்செயலாக மறுபக்கம் திரும்பிப் பார்த்தேன். அங்கே தரையில் நாச்சியாரு ஒரு தலைப்பலகையை வைத்துக்கொண்டு தூங்கிக்கொண்டிருந்தாள்! மார்பின்மீது விரித்துக் கவிழ்க்கப்பட்ட 'அல்லி அரசாணி மாலை'ப் புத்தகம். பக்கத்தில் வெங்கலப் பல்லாங்குழியின் மீது குவிக்கப்பட்ட சோழிகள். ஜன்னலில் ஒரு செம்பு, பக்கத்தில் ஒரு சினுக்குவலி, இரண்டு பக்கமும் பற்கள் உள்ள ஒரு மரச்சீப்பு, ஒரு ஈருவாங்கி, ஒரு உடைந்த முகம்பார்க்கும் கண்ணாடி முதலியன இருந்தன. அவள் அயர்ந்து தூங்கிக்கொண்டிருந்தாள். பால் நிறைந்து கொண்டே வரும் பாத்திரத்தில் பால்நுரைமீது பால் பீச்சும்போது ஏற்படும் சப்தத்தைப்போல் மெல்லிய குறட்டை ஒலி. அவள் தூங்கும் வைபவத்தைப் பார்த்துக்கொண்டே இருந்தேன். அடர்ந்த நீண்டு வளைந்த ரெப்பை ரோமங்களைக் கொண்ட மூடிய அவள் கண்கள் அவ்வளவு அழகாய் இருந்தது. மெதுவாக இறங்கிப் போய் அந்த மூடிய கண்களில் புருவத்துக்கும் ரெப்பை ரோமங்களுக்கும் மத்தியில் முத்தமிட வேண்டும்போல் இருந்தது.

சொல்லி வைத்ததுபோல் நாச்சியாரு கண்களைத் திறந்தாள். தூக்கத்தினால் சிவந்த விழிகள் இன்னும் பார்க்க நன்றாக இருந்தது. குலுக்கைமேல் இருந்த என்னை அதே கணம் பார்த்துவிட்டாள். 'இது என்ன வேடிக்கை?' என்பதுபோல் சிரித்துப் பார்த்தாள். அவள் எழுந்த வேகத்தில் புஸ்தகம் அவளுடைய காலடியில் விழுந்தது. விழுந்த புஸ்தகத்தைத் தொட்டு வேகமாக இரு கண்களிலும்

ஒற்றிக்கொண்டு அதை எடுத்து ஜன்னலில் வைத்தாள். பின்பு லஜ்ஜையோடு சிரித்துத் தலைகவிந்துகொண்டே, நழுவும் மார்பு சேலையை வலதுகையினால் மார்போடு ஒட்ட வைத்துக்கொண்டு மெதுவாக அந்த இடத்தை விட்டு நழுவினாள்.

கல்யாணத்துக்கு முன்பிருந்தே நாங்கள் பரஸ்பரம் ஒருவரையொருவர் அறிந்துகொண்டோம். யாரும் அறியாமல் தொலைவில் இருந்துகொண்டே ரகசியமாக ஒட்டிப் பழகினோம். இதயங்கள் அப்படி ஒன்றி ஊசலாடின. பேசாத ரகசியங்கள்தான் எங்களுக்குள் எத்தனை!

எனக்கு என்னென்ன சௌகரியங்கள் வேண்டுமென்று நான் உணர்த்தாமலே அவளுக்குத் தெரிந்திருந்தது. ஆச்சரியப்படும்படி அவைகள் செய்து முடிக்கப்பட்டிருக்கும் அப்போது.

********

ஒரு நாள் கோவில்பட்டியிலிருந்து ராத்திரி வந்தேன். அன்று வீட்டிற்கு நிறையச் சாமான்கள் வாங்க வேண்டியிருந்தது. காலம் முன்னைமாதிரி இல்லை. ஒரும்பாகிவிட்டது. முன்னெல்லாம் கொஞ்ச ரூபாயில் நிறையச் சாமான்கள் வாங்கிக்கொண்டு வரலாம். இப்போதோ நிறைய ரூபாய்கள் கொண்டுபோய் கொஞ்ச சாமான்களையே வாங்கமுடிகிறது.

வந்ததும் வராததுமாய்ச் சாமான்களையெல்லாம் வண்டியிலிருந்து இறக்கி வைத்துவிட்டுப் பணப்பையையும் கச்சாத்துகளையும் நாச்சியாருவிடம் கொடுத்துவிட்டு அப்படியே வந்து கட்டிலில் வீழ்ந்தேன். உடம்பெல்லாம் அடித்துப்போட்டதுமாதிரி வலி. கண்கள் ஜிவ்வென்று உஷ்ணத்தைக் கக்கிக்கொண்டிருந்தது. மண்டைப் பொருத்தோடுகளில் ஆக்ரா இறக்கியது போல் தெறி. கம்பளியை இழுத்துப் போர்த்திக்கொண்டேன். குழந்தைகள் அயர்ந்து தூங்கிக்கொண்டிருந்தன. அரிக்கன் லாம்பை சரியாகத் துடைத்துத் திரியைக் கத்தரித்து விடாததாலோ என்னவோ சுடர் பிறைவடிவில் எரிந்துகொண்டிருந்தது. சிம்னியில் புகைபிடிக்க ஆரம்பித்திருந்தது.

அந்த வெளிச்சத்தில் அவள் கச்சாத்துக்களிலிருந்த தொகைகளைக் கூட்டிக்கொண்டும், மீதிப்பணத்தை எண்ணிக் கணக்குப் பார்த்துக் கொண்டுமிருந்தாள்.

கணக்கில் ஒரு ஐந்து ரூபாய் சொச்சம் உதைத்தது. அந்த ரூபாய்க்கான கணக்கு என்ன என்று என்னிடம் கேட்டாள்.

’எல்லாத்தையும் எடுத்துவை

கணக்கு எங்கெயும் போய்விடாது;

காலையில் பாத்துக்கலாம், எல்லாம்.’

அவள் பிடிவாதமாகக் கணக்குப் பார்த்துக்கொண்டிருந்தாள்.

எனக்கு கண்களைத் திறக்க முடியவில்லை. மூடிக்கொண்டே இருக்கவேண்டும்போல் இருந்தது. என்னுடைய நெற்றி ஒரு இதமான விரல்களின் ஒத்தடத்துக்கு ஏங்கியது. மூக்கு மயிர் கருகும்படியான உஷ்ணக்காற்றை நான் வெளிவிட்டுக் கொண்டிருந்தேன். நல்ல உயர்ந்த காய்ச்சல்.

சூழ்நிலையின் பிரக்ஞை வட்டம் சுருங்கிக்கொண்டே வந்தது. சின்ன, மெல்லிய சப்தங்கள்கூடக் கோரமாகக் கேட்டன. கண்களைத் திறந்து நாச்சியாரு என்ன செய்கிறாள் என்று திரும்பிப் பார்த்தேன். அவள் ரூபாய் அணா பைசாவில் மூழ்கியிருந்தாள். குளிர்ந்த காற்றுப்பட்டதால் கண்கள் நீரை நிறைத்தன, துடைத்துக்கொள்ளக் கையை எடுக்க இஷ்டமில்லை. அதை இமைகளாலேயே மூடி வெளியேற்றினேன். மீண்டும் நாச்சியாருவையே பார்த்தேன். அவளுடைய ரவிக்கையின் அவிழ்க்கப்பட்ட முடிச்சு முடியப்படாமலே தொங்கின. கூந்தல் வாரிச் சேர்க்கப்படாததால் கற்றைகள் முன்முகத்தில் வந்து விழுந்து கிடந்தன.

என்ன ஆனந்தமான ‘சொகம்’ இந்தக் கண்களை மூடிக்கொண்டே இருப்பதினால்! கானல் அலைகளைப்போல் என் உடம்பிலிருந்து மேல் நோக்கிச் செல்லும் உஷ்ண அலைகள் கண்ணால் பார்க்கமுடியாமலிர்ந்தாலும் தெரிந்தது. நான் எரிந்துக்கொண்டிருக்கும் ஒரு சிதைக்குள் படுத்திருப்பதுபோல் குளிருக்கு அடக்கமாக இருந்தது. உயர்ந்த காய்ச்சலின் போதை இடைவிடாது மீட்டப்படும் சுருதிபோல் லயிப்பு மயமாக இருந்தது. இந்த ஆனந்தத்தில் பங்குகொள்ள எனக்கு ஒரு துணைவேண்டும்போல் இருந்தது. அவள் எங்கே? அவள்தான்; என் அருமை நாச்சியாரு.

‘நாச்சியாரு, என் பிரியே! நீ எங்கிருக்கிறாய்?’

முதிர்முப்பாட்டனார் பிரகடனப்படுத்தினார். மேலும் நாவிதனுக்குள் அங்க சாஸ்திரத்தையும் மனித உடலின் சீதோஷ்ணத்தையும் பற்றின ஞானம் இயல்பாகவே படிந்து கிடக்கிறது. ரோமம் என்பது உடலுக்கு வெளியே ஓடும் நரம்பு என்பதை அறிவு அறிந்துகொள்ளும் முன்பே சவரம் புரியும் கைகள் அறிந்துகொண்டிருக்கின்றன என்றும் சிரைத்துக் கொள்பவரின் உடல் தவிர்க்க வேண்டிய விஷமயிர்க் கற்றைகளை உடலோடு ஒட்டி வளர வேண்டிய நன்மயிர்ப் படுகையினுள்ளிருந்து தேடிப் பிடித்துக் களையும் நாவிதனின் பிரயத்தனமானது உபநிஷத்துகளிலிருந்து உலகசாரத்தைத் தேடும் பண்டிதனுக்கு எந்த விதத்திலும் குறைந்ததல்ல என்றும் என் முதிர் முப்பாட்டனார் மக்களை அறியச் செய்ததிலிருந்து முடியை மழித்துக்கொள்வதும் அதன் பொருட்டு நாவிதர்களின் வீட்டு வாசல்களில் நெடுநேரமாகத் தவங்கிடப்பதும் பழைய நகரத்தில் பிறரிடம் பெருமையோடு பகிர்ந்துகொள்ளும் விஷயங்களில் ஒன்றாகிப்போனது. காங்கை நோயால் அவதிப்பட்டுக்கொண்டிருந்தவர்கள் தங்களின் கழுத்தும் முதுகும் காற்றின் திசையில் நன்றாகத் திறந்திருக்கும்படி தலைமுடியைச் சிகையாகக் குறுக்கிக்கொண்டு சென்றார்கள். குளிர்க் காய்ச்சலாம் நடுங்கிக்கொண்டிருந்த நோயாளிகள் அதைக் கூந்தலாக நீட்டி மேனியை மூடிக்கொண்டார்கள். ஞானத்தைக் கவர்ந்து செல்லும் மாலை வேளைகளின் அரக்கர்களிடமிருந்து தங்களைக் காப்பாற்றிக் கொள்ள விரும்பிய கல்விமான்கள் தலைநரம்புகளனைத்தையும் ரோம இழைகளால் பின்புறமாகக் கட்டி இழுத்து நுனியில் பதினாறு பிரிக்குடுமியாக முடிச்சிட்டுத் தரும்படி நாவிதர்களை வேண்டி நின்றார்கள். சம்போக சுகம் அனுபவிக்க முடியாமல் அல்லலுற்ற ஆண்கள் தலைமுடியைத் தளர்த்தி ஈரம் சொட்டிக்கொண்டே இருக்கும் சடையாக அதை மாற்றிக்கொண்டு திருப்தியுடன் திரும்பினார்கள். இல்லற சந்நியாசிகளாக இருக்கப் பிரியப்பட்டவர்களுக்கோவெனில் இதற்கு நேர்மாறாக நுனியில் பட்டுத்துணியால் மறைத்துக் கட்டப்பட்டிருக்குமாறு நாவிதர்கள் பின்னல்களை உருவாக்கி அனுப்பி வைத்தார்கள். இல்லறத்தைத் துறந்து காட்டை நோக்கிச் சென்ற துறவிகள்கூடத் தங்களை மழித்துக்கொள்ள மறுத்து முகமெங்கும் ரோமக் கற்றைகளைக் காடாக வளரும்படி விட்டு வைத்ததன் மூலம் தங்களையுமறியாமலேயே வதனாலங்கார சூசிகையின் எட்டாம் அங்கத்தை ஏற்றுக்கொண்டவர்களானார்கள். கன்னங்களிலும் மேலுதட்டின் மேலும் முகவாயிலும் கவனமாகச் செதுக்கப்பட்ட மயிர்ப்படுகைகள் பழைய நகரத்தின் ஆண்கள் அத்தனை பேரையும் அழகானவர்களாயும் ஆரோக்கியமானவர்களாயும் ஆக்கி வைத்திருந்ததால் சுயம்வரங்கள் பெருங்குழப்பத்தில் முடிந்தன. வாயிலிருந்து துர்மணம் வீசும் ஆண்களையோ நீரொழுகும் மூக்கைஉடைய ஆண்களையோ அவச்சொற்களை அள்ளி வீசும் ஆண் குரல்களையோ அங்கே பிற தேசத்தவர்கள் எவராலும் பார்க்க முடியவில்லை என்று எங்களின் வம்சாவளிக் கதைகள் சொல்கின்றன. மட்டுமல்ல. பெண்கள் நாவிதர்களை நாடும் வழக்கமோ அல்லது பெண் நாவிதர்களோ புழக்கத்தில் இல்லாத பழைய நகரத்தில் வெளியே தெரியும் அங்கங்களால் புருஷர்களின் லட்சணமும் மறைத்து வைக்கப்படும் அங்கங்களால் ஸ்திரீகளின் சௌந்தர்யமும் பிறர் கண்படத் துலங்கும் எனும் சாமுத்ரிகா லட்சண விதிக்கேற்ப ஆண்களின் முகத்தில் வளரும் ரோமக் கற்றைகளுக்கு இணையான சக்தியையும் வனப்பையும் கூடுதலாக நோய் தீர்க்கும் மகத்துவத்தையும் பெண்களின் புஜங்களினடியிலும் பத்மத்திலும், அரும்பும் ரோம இழைகள் கொண்டிருப்பதால் அவர்கள் அதை அலட்சியப் படுத்தலாகாது என்னும் என் முதிர்முப்பாட்டனாரின் போதனை இருபத்துமூன்றாம் தலைமுறை ராஜதானியின் பெண்மக்களின் அறிவில் பிரகாசித்துக்

கொண்டிருந்தது. புருஷனின் கண்களுக்கும் பரபுருஷர்களின் ஊகத்துக்கும் மட்டுமே வசப்படும் பெண்களின் பவித்திரமான மறைவிடங்களைச் செதுக்கி அலங்கரித்துப் பராமரிக்கும் பொறுப்பு பெண்ணுக்கு மட்டுமல்லாமல் ஆணுக்கும் உண்டு என்று என் முதிர்முப்பாட்டனார் அறிவித்தபோது அது ஆண்களிடையே பகிரங்கமான பெரும் எதிர்ப்பையும் பெண்களிடமிருந்து ரகசியமான ஆசிர்வாதத்தையும் பெற்றுக்கொண்டது. இவ்விதமான பிரச்சாரங்களை நிறுத்திக்கொள்ளச் சொல்லி அவரை அரசவை நிர்பந்தித்தபோது உபாத்தியாயர்களும் புரோகிதர்களுங்கூட ரகசியமான பல தருணங்களில் தத்தமது இல்லத்தரசிகளின் நாவிதர்களாகச் செயல்படுவதுண்டு என்கிற உண்மையை என் முதிர்முப்பாட்டனார் தைரியமாகப் பொது அரங்கில் எடுத்துச் சொல்லி கல்விக்கூடங்கள் மற்றும் கோவில்களின் பகையையும் சம்பாதித்துக்கொண்டார். (பின்னாளில் இவ்வரங்குகளின் பாத்தியக்காரர்கள்தான் என் முதிர்முப்பாட்டனாரின் புகழை அபவாதம் எனும் கொடிய நெருப்பு கவ்வி விழுங்கத் துவங்கிய காலத்தில் அது அணைந்து விடாமல் அவரை முழுக்க எரித்துப் பொசுக்கி விடும் வண்ணம் நெய் வார்த்து உதவினார்கள்). மறுபுறம் இந்தவிதமான அலங்காரச் சூகங்களையெல்லாம் பறைப் பெண்களும் அறியும்படி பகிரங்கமாக என் முதிர்முப்பாட்டனார் சொல்லிக்கொண்டிருப்பதைக் கண்டும் அதன் விளைவாகத் தங்கள் கணவன்மாரின் அலைபாயும் மனங்களை நினைத்தும் உயர்குடிப் பெண்கள் வேறு திகிலுற்றுப் போயிருந்தார்கள். அவர்கள் தங்கள் நாபியிலிருந்து பத்மம் வரை படர்ந்து பொலிந்திருக்கும் அடர்ந்த ரோமப் படுகையை அஞ்சனக்கோட்டைப் போல மெல்லிதானதாகத் திருத்தி வரைந்து கொள்ளட்டும் என்று கூறி அவர்கள் இழந்து போயிருந்த நிம்மதியை அவர்களுக்கே திரும்ப அளித்தார் என் முதிர்முப்பாட்டனார். மேலும் மனம் விரும்பாத ஆணுக்குப் பலவந்தமாக மணமுடித்து வைக்கப்பட்ட பெண்கள் யோனிமுடியை இழைக்கப்பட்ட மரத்தினின்று சிதறும் கீற்றுகளைப் போல்ச் சுருள் வடிவினதாக செதுக்கிக்கொள்ளட்டும். விரும்பும் ஆணையே துணைவனாகப் பெற விரும்பும் யுவதிகள் நிதம்பத்தின் மேற்குழலை மீன் வடிவத்தில் வரைந்துகொள்ளட்டும். குழந்தைப் பேறு அடையாதிருக்கும் மங்கையர் புஜத்தினடியிலும் தொடைகளின் நடுவிலும் மழைக்குப் பின் புதிதாக வளர்ந்திருக்கும் புற்படுகையைப் போல மிருதுவாகவும் எப்போதும் ஈரமாகவும் இருக்கும்படி மயிர்க்கற்றையை மிகச் சிறிதாகக் கத்தரித்துக்கொள்ளட்டும் பரபுருஷனைக் கூட விரும்பும் பெண்கள் கழுத்திற்குக் கீழ் எங்குமே ரோமமில்லாதபடி தன் உடலைக் கூழாங்கல்லைப் போல மருவற்றதாக மழித்துக்கொள்ளட்டும். ஒரு சிறுமியின் தலைமுடி அப்பருவத்தின் இயல்பாகிய மணல் தன்மையிலிருந்து வெள்ளிக் கம்பிகளின் தன்மைக்கு மாறுவதைத் தொட்டுணர்ந்து அவள் ருதுவெய்தப் போகும் பருவம் நெருங்கி விட்டதைச் சொல்லும் நாவிதனை அறிந்த தாய்மார்கள் தங்கள் பெண்மக்கள் விரும்பத்தகாத சூழலில் ருதுரத்தம் வெளிப்பட்டு அவமானப்படப் போவதைத் தவிர்த்துக்கொள்ளட்டும்.

இயற்கைக்கும் அதன் தந்திரங்களுக்கும் பால் பேதமில்லை என்று என் முதிர்முப்பாட்டனார் சொல்லிவந்த அந்தக் காலகட்டத்தில் பழைய நகரமெங்கிலும் பெண்கள் தங்கள் கணவர்களையும்காதலர்களையும் தங்களுடைய பிரத்யேக நாவிதர்களாக்கி நாடு பூராவிலும் பரவச் செய்திருந்தார்கள். அகத்தினழகைப் புகழ்ந்து மழிப்பதையும் வளர்ப்பதையும் பழித்துப் பேசிய சில

பழைய சாஸ்திரங்கள் நாவிதர்களுக்கு எதிரானவை என்று என் முதிர்முப்பாட்டனார் அறிவித்ததன் பேரில் அவை யாராலும் படிக்கப் படக்கூடாதென்று இருபத்துமூன்றாம் தலைமுறை அரசாங்கத்தால் தடை செய்யப்பட்டன. அவ்விதமான ஓலைச் சுவடிகள் சில இடங்களில் பெண்களால் உலை நீருக்காகத் தீ வைத்துக் கொளுத்தப்பட்டன என்றும் சொல்வதுண்டு. இப்படி என் முதிர்முப்பாட்டனாரின் வரவால் நாவிதர்கள் பல புதிய சலுகைகளையும் பெருமைகளையும் முக்கியத்துவத்தையும் நிறைய செல்வத்தையும் ஈட்டிக்கொண்டிருந்தபோது என் முதிர்முப்பாட்டனார் மயிர்க் கண்களின் வழியே சுரக்கும் வியர்வை நீரைக் கட்டுப்படுத்துவதன் மூலம் அந்நீரின் மணத்தால் எழுப்பப்படும் கனவுகளை மாற்றியமைக்க முடியுமா என்பது குறித்த முடிவற்ற ஆராய்ச்சியில் ஈடுபட்டிருந்தார். ஏற்கனவே பிறர் உறக்கத்துக்குள் ஊடுருவும் கலையைக் கற்றுக்கொள்ள அவர் தன் காளைப் பருவம் முழுவதையும் செலவழித்திருந்தாரென்று கூறுவார்கள். அப்பருவம் பூராவிலும் அவர் ஒரு கேரள நம்பூதிரியின் வாத்ஸல்யத்தைப் பெற்ற சீடராக இருந்தார். பிறப்பால் நாவிதரான என் முதிர்முப்பாட்டனார் தன் குலத்திற்கு மறுக்கப்பட்டிருந்த சாஸ்திரங்களைக் கற்றுக்கொடுக்கவென்று வர்ணபேதங்களைத் துறந்த ஒரு ஆசானைத் தேடித் தன் குரல் உடைந்த காலந்தொட்டுச் சில வருடங்கள் வரை அவமானங்களுக்கும் தவறுகளுக்கும் பயங்களுக்குமிடையே அலைந்து திரிந்து கடைசியில் அபேத ஞானத்தைப் புரிந்து கொள்ளாத மனிதப் பிறவிகளால் பைத்தியக்காரனென்று கேலி செய்யப்பட்டு நகரத்தை விட்டு வெளியேறி மரங்களுக்குள் தன்னை மறைத்தபடி வாழ்ந்து கொண்டிருந்த நம்பூதிரி ஒருவரைக் கண்டுபிடித்து அவரிடம் ஏற்கனவே சீடர்களாயிருந்த இரண்டு பிராமண யுவன்களோடு சேர்ந்து மூன்றாவது சீடரானார். இந்த இருவரில் முதலாமவர் ஒளியையும் மணத்தையும் கொண்டு பார்க்க முடியாத வஸ்துக்களின் நிறையையும் எடையையும் கணித்துச் சொல்லும் ஆற்றல் வாய்ந்தவர். இரண்டாமவர் நகர்ந்துகொண்டிருக்கும் ஒரு பொருளின் வேகத்தையும் திசையையும் கொண்டு அது முன்பு என்னவாக இருந்ததென்பதையும் பின்பு என்னவாக மாறுவதற்காக அப்படி நகர்ந்துகொண்டிருக்கிறது என்பதையும் அவதானித்து விட வல்லவர். எனினும்கூட பிற மனிதர்களின் கனவுகளைப் பார்க்கும் கலை காட்டை விட்டு வெளியேற முடியாமல் நான்கு பேர்களுக்கு மட்டுமே தெரிந்த ரகசியமாக தன் அதிசயங்களை அறியக் காட்டிக்கொண்டிருக்குமாறு விதிக்கப்பட்டு விட்ட அவலத்தை எண்ணிக் கலங்கிக்கொண்டிருந்த என் முதிர்முப்பாட்டனார் ஞானி எனப் புகழும் அந்த நம்பூதிரி கடைசியில் உயர்குலத்தில் பிறந்த தன் பெண்ணைப் பிறப்பால் நாவிதரான என் முதிர்முப்பாட்டனாருக்கே திருமணம் செய்து கொடுத்து விட்டுத் துயரச் சகதிக்குள் தன்னை உயிரோடு புதைத்துக்கொண்டு மாண்டுபோக முடிவு செய்த தருணத்தில் பிறர் கனவுகளைப் பார்க்கும் கலையை அறிந்தவராக உலகிலேயே என் முதிர்முப்பாட்டனார் ஒருவர் மட்டுமே எஞ்சியிருந்தார். அதோடு கூட கனவுகளோடு நெருங்கிய சம்பந்தமுள்ளவையென்று கூறப்பட்ட வர்மக் கலையையும் வடமொழியையும் அவர் கசடறக் கற்றுத் தேர்ந்தார். மற்ற இருவரில் ஒருவர் தன் மற்ற இரு சகாக்களோடும் அதுவரையில் கற்ற வித்தையைப் பக்குவம் அடையும் முன்பே பரீட்சை செய்து பார்க்க எண்ணி குருவிற்குத் தெரியாமல் காட்டை விட்டு வெளியேறி நகரத்திற்குச் சென்று விளையாட்டாக ஒரு நோயாளியின் கனவிற்குள் பிரவேசிக்க முனைந்தபோது நோய்க்கூறுகளை உண்டாக்கும் கெட்ட கனவுகளின் துர்நாற்றத்திலும் சுழலிழுப்பினுள்ளும் சிக்கி அதன் உக்கிரத்தைத் தாங்கிக்கொள்ள முடியாமல் புத்திபேதலித்துப் போய் அறையைவிட்டு

வெளியே வந்ததும் அந்த அறை இருந்த நான்கடுக்கு மாளிகையின் நான்காவது அடுக்கிலிருந்து கீழே குதித்துத் தற்கொலை செய்துகொண்டுவிட்டார். இன்னொரு சீடரும் அதேபோன்ற பக்குவமற்ற பலவீனமான மனோ திடத்தால் அதே விதமான பாதிப்புக்கு உள்ளாகி நிலைகுலைந்து சாமியாராக புண்ணிய பூமியாம் காசிக்கு ஓடிப் போய்விட்டார். அங்கே கனவுகள் அண்ட முடியாத காசியின் அடர்ந்த வனப் பகுதிகளுக்குள் என்றுமே வெளிவர முடியாதபடி அவர் தன்னை சிறைப்படுத்திக் கொண்டுவிட்டதாக அவரைப் பற்றின செய்திகள் காற்றில் உலவின. ஆனால் என் முதிர்முப்பாட்டனாரோ வருடங்களுக்குப் பிறகு தன் சகாவை வேறொர் அசம்பாவிதமான இடத்தில் தன் மதியின்மையால் வலியப் போய்ச் சந்தித்து அதன் மூலமாகத் தன் வீழ்ச்சியையும் தேடிக்கொண்டார்.

எப்படியிருந்தாலும் அப்போது அதாவது என் முதிர்முப்பாட்டனாரின் காலத்தில் பிறர் உறக்கத்தினுள் புகுந்து அவர்களின் கனவுகளைக் காணும் கலையில் தேர்ச்சி பெற்ற ஒரே பண்டிதர் அவரே என்பதாகவே உலகம் அறிந்திருந்தது. அதனால் காளைப்பருவத்தின் நடுப்பகுதியில் அவர் பிறந்த மண்ணாகிய பழைய நகரத்திற்குத் தன் மனைவியுடன் திரும்ப வந்து சேர்ந்தபோது அப்படி வருவதற்கு முன்பே மறைந்திருந்தாலும் விளக்கின் இருப்பு அதன் பிரகாசத்தால் அறியப்படுவதைப் போல அவருடைய கீர்த்தி சொந்த தேசத்தவரால் ஏற்கனவே உணரப்பட்டுவிட்டது. அவருடைய ஆசானைப் போலவே அவரையும் பைத்தியக்காரனென்று பாதி நகரம் மறைவாகப் பேசிக்கொண்டிருந்தபோதிலும் மேலும் அவருடைய பிரச்சாரங்களும் செயல்களும் இருபத்துமூன்றாம் தலைமுறை ராஜனுக்கும்கூட சமஸ்தானத்தின் தலைவனென்கிற முறையில் தர்மசங்கடத்தைக் கொடுத்திருந்த போதிலும் பால்பேதத்தையும் திணைபேதத்தையும் பணபேதத்தையும் வர்ணபேதத்தையும் ஞானபேதத்தையும் மொழிபேதத்தையும் துறந்துவிட்ட அவருடைய ஒளி அரசவையில் பிற கல்விமான்களுக்கிணையாக அவரை அமர்த்திப் பெருமைப்படுத்தும்படி அவனை நிர்பந்தித்திருந்தது. மட்டுமல்லாமல் அரண்மனை வளாகத்திற்குள்ளேயே என் முதிர்முப்பாட்டனாருக்கென்று ஒரு தனிக் குடியிருப்பும் ஒதுக்கப்பட்டிருந்தது. அரண்மனைக்கு வெளியே சென்று சவரம் செய்து பொருளீட்ட வேண்டிய நிலையில் ராஜன் அவரை விட்டு வைக்கவில்லை. அவருக்கென்று ஒதுக்கப்பட்டிருந்த சிறு அரண்மனை போன்ற அந்த இல்லத்தில் அவர் தன் மலையாள தேசத்து மனைவியுடனும் அவள் மூலமாக உண்டான வாரிசுகளுடனும் பின்னாளில் குருவின் சாபத்தால் பழிக்கு ஆளாகி அங்கிருந்து விரட்டியடிக்கப்படும் நாள் வரை சௌக்கியமாகத் தங்கியிருந்தார். அரச குடும்பத்தைச் சேர்ந்தவர்களுக்கு நாவித நிமித்தம் மட்டுமே தன் அறையை விட்டு வெளியே வருவதல்லாமல் பிற சமயங்களில் வீட்டினுள் தன் அறையில் அமர்ந்து தான் கற்ற சாஸ்திரங்களையெல்லாம் திரும்ப திரும்பப் படித்தும் பயிற்சி செய்தும் புதிய வழிமுறைகளை ஆராய்ச்சி செய்துகொண்டே இருந்தார். அரசவையில் அவருக்கென்று இடப்பட்டிருந்த ஆசனம் பெரும்பாலான சமயங்களில் அவரால் நிரப்பப்படாமலே இருந்ததென்பார்கள். பொதுவாக இம்மாதிரி அபூர்வமான மனிதர்களே எப்போதும் ஒரு தனியறைக்குள் தங்களையும் புதைத்துக்கொண்டுவிடுவது எங்கும் நடக்கக் கூடியதுதானே. அவர்கள் அடிக்கடி தங்களையும் தங்கள் கல்வியையும் வெளிக்காட்டிக்கொண்டு அவற்றைச்

சாதாரணக் காட்சியாக்கிவிட விரும்புவதில்லை. அவர்களைப் போலவே என் முதிர்முப்பாட்டனாரும் பல ஆச்சர்யமான வித்தைகளில் தேர்ந்தவரென்ற மதிப்பை நிரம்பப் பெற்றிருந்தாரேயொழிய அவற்றைப் பிறர் முன் தேவையற்ற சந்தர்ப்பங்களில் கேளிக்கைக் கூத்தாக நிகழ்த்திக் காட்டிப் புகழ் சம்பாதிக்க முனைந்ததேயில்லை. அவருக்குள் கனன்று கொண்டிருந்த அவருடைய வித்தைகளின் மங்காத தழல் அவர் முகத்தில் எதிரொளித்த ஜாஜ் வல்யமே அவருக்குப் போதுமான கீர்த்தியைப் பெற்றுத் தர வல்லதாய் இருந்தது. எதையும் எங்கேயும் நிகழ்த்திக் காட்டி நிரூபிக்க முயலாமல் அறைக்குள்ளேயே தன்னைப் பூட்டிக்கொண்டு காலங்கழிக்கும் ஒரு நாவிதனுக்கு அரசவையில் எப்படி இடம் இருக்க முடியுமென பிற ஞானவான்கள் கேள்வி எழுப்பியபோது ராஜன் சொன்னான்: ஒரு சிறந்த வாள் வீரனுக்கு சமாதானம் கசப்பான காலமாயிருக்க முடியாது. ஒரு நல்ல மருத்துவனுக்கு ஆரோக்கியமான மக்கள் எதிரிகளாயிருக்க முடியாது. எந்தச் சிறந்த கல்விமானும் தன் வித்தையைப் பிரயோகித்துக் குணப்படுத்தும் அளவுக்கு துக்ககரமான ஸ்திதியில் சகமனிதன் வீழ்ந்துவிடக் கூடாதென்றே விரும்புவான். அதே சமயத்தில் அப்படிப்பட்ட ஒரு சூழ்நிலையை எப்போதும் எதிர்பார்த்துத் தன் வித்தை துருப்பிடித்து விடாதபடி அதைத் தீட்டிக் கொண்டேயுமிருப்பான். அப்பையா (அதுதான் என் முதிர் முப்பாட்டனாரின் பெயர்) இந்த அரசவையில் எப்போதும் இருந்துகொண்டேயிருக்க வேண்டுமென்பதல்ல என் ஆசை. மாறாக அவர் தேவைப்படும் அபூர்வமான தருணமொன்றில் அவர் நமக்குக் கிடைக்காத அரிய பொருளாக இந்நகரத்திலிருந்து தொலைந்து போய்விடக் கூடாது. அவர் நம் அரசவையில் இருப்பதால் பெருமை அவருக்கல்ல நமக்குத்தான் என்று நான் உங்களுக்குச் சொல்கிறேன். உண்மையில் வித்தைகளை அவர் வெளிக்காட்ட முடியாத வண்ணம் ஆரோக்கியமான ராஜ்ஜியமொன்றை நான் பரிபாலித்துக்கொண்டிருக்கிறேனென்பதுதான் அவரோடுகூட என்னையும் பெருமைகொள்ளச் செய்து கொண்டிருக்கிறது.

தூங்கும் பிற மனிதர்களுடைய கனவுகளைக் காணும் தன்னுடைய அபூர்வமான வித்தையை என் முதிர் முப்பாட்டனார் தன் வாழ்நாளில் நான்கே நான்கு சந்தர்ப்பங்களில்தான் பிரயோகித்தார். அந்த நான்கு சந்தர்ப்பங்களுமே அவர் வாழ்க்கையில் நான்கு திருப்புமுனைகளுக்குக் காரணமாய் அமைந்துவிட்டன என்று எங்கள் வம்சாவளிக் கதை கூறுகிறது. முதல் தடவை தன்னுடன் அந்தக் கலையைக் கற்றுக்கொண்டிருந்த மற்ற இரு சீடர்களுடன் சேர்ந்து போதிய பக்குவம் பெறுவதற்கு முன்பே வித்தையை ஒரு நோயாளியிடம் பரீட்சை செய்து பார்க்க முயன்ற அந்த துர்பாக்கியமான சம்பவம். நல்லவேளையாக என் முதிர்முப்பாட்டனார் நோயாளியிடம் தன் பிரயோகத்தைத் துவக்கியபோது காலம் பின்னிரவு சரிந்துகொண்டிருக்கும் நேரமாகக் கடந்துவிட்டதால் தூங்கிக்கொண்டிருந்த நோயாளியின் கனவுகள் தங்கள் உக்கிரத்தை இழந்து அவன் உறக்கத்தோடு உறக்கமாக அமிழ்ந்து வடிந்துகொண்டிருந்தன. மற்ற இருவரையும் போலவே தன் இளமைத் திமிராலும் கல்விச் செருக்காலும் மிகப் பெரும் ஆபத்தைச் சந்திக்கவிருந்த என் முதிர்முப்பாட்டனார் அன்று தெய்வாதீனமாக அதிலிருந்து தப்பினார். விஷயம் தெரிய வந்தபோது நம்பூதிரி அவர் மேல் தனிப்பட்ட வாத்ஸலம் கொண்டிருந்ததால் மற்ற இருவரையும் எண்ணி அளவு கடந்த துயரத்திலும் என் முதிர்முப்பாட்டனார் தப்பித்ததை எண்ணி மட்டற்ற மகிழ்ச்சியிலும்

அலைக்கழிக்கப்பட்டுவிட்டார். பிறர் அனுமதியின்றி அவர்களுடைய தூக்கத்துக்குள் நுழைந்து கனவுகளைப் பார்ப்பது கன்னக்கோல் வைத்துத் திருடுவதற்குச் சமமான குற்றம் என்று அவர் என் முதிர்முப்பாட்டனாரை எச்சரித்தார். என் முதிர்முப்பாட்டனாரின் மீதிருந்த அளவு கடந்த அன்பால் அவரை அம்முறை மன்னித்துத் தன் சீடராக தொடந்து நீடிக்கும் வாய்ப்பையும் அளித்தாரென்று கூறுவர். ஆனால் பல வருடங்கள் கழித்து வேகத்தின் சுழல்வெளியாகிய காளைப் பருவம் முடிந்து விவேகத்தின் நந்தவனமாகிய நடுப்பிராயத்திற்குள் பிரவேசித்த காலத்தில் மதியைக் கெடுத்த ஆசையால் உந்தப்பட்டு குருவின் எச்சரிக்கையை மறந்து தன் வித்தையை என் முதிர்முப்பாட்டனார் அவர் மனைவியும் குருவின் மகளுமான என் முதிர்முப்பாட்டியின் தூக்கத்தினுள் அவரறியாமல் பிரயோகித்துப் பார்த்தபோது குருவின் எச்சரிக்கை சாபமாக மாறி அவரிடமிருந்து கலையை அவர் முற்றாக மறந்து போகும்படி பறித்துக் கொண்டுவிட்டது. அந்த நான்காவது பிரயோகமே என் முதிர்முப்பாட்டனார் தன் இளமை முழுவதும் கற்றுத் தேர்ந்த அபூர்வமான வித்தையின் கடைசி பிரயோகமாகவும் அமைய விதிக்கப்பட்டுவிட்டது. தன்னைத் தீராத பழிக்கும் அவமானத்திற்கும் ஆளாக்கவிருக்கும் நான்காவது பிரயோகத்தை நோக்கி தான் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் விதி தன்னை உந்திவிடப்போகிறது என்பதை மூன்றாவது பிரயோகத்தின்போதே என் முதிர்முப்பாட்டனார் அறிந்து கொண்டு விட்டதோடல்லாமல் அதைப் பலபேர் அறிய பகிரங்கமாகச் சொல்லியும் வைத்தார். வேடிக்கை என்னவென்றால் பல வருடங்களுக்கு முன்பே அழிவுகளுக்கு வித்திட்டுவிட்ட என் முதிர்முப்பாட்டனாரின் அந்த துரதிர்ஷ்டம் பிடித்த மூன்றாவது பிரயோகம் அவர் அதைப் பிரயோகித்த காலத்தில் அழிவின் சமிக்ஞை சற்றுமின்றி அவருக்கு உள்ளூரில் மட்டுமல்லாது கடல் கடந்த நாடுகளிலும் பெரும் புகழை ஈட்டிக் கொடுப்பதாகத்தான் வந்தமைந்தது. காரணம் அந்தச் சந்தர்ப்பத்தில் என் முதிர் முப்பாட்டனார் கற்றுக்கொண்டிருந்த வித்தையின் மகத்துவம் மட்டுமல்லாது அவருடைய புத்தி சாதுர்யமும் ஊகிக்கும் திறமையும்கூட பளீரென வெளிப்பட்டன. கடல் கடந்த நாடுகளிலிருந்தும் அவருக்கு சீடர்களாகும் விருப்பத்துடன் ஆயிரக்கணக்கானவர்கள் அவர் காலடியில் வந்து விழும்படியாக அந்தச் சம்பவம் அமைந்துவிட்டது. ஆனால் என் முதிர்முப்பாட்டனார் அவர்கள் யாரையும் தன் சீடர்களாக வரித்துக்கொள்ள முன்வரவில்லை. அந்தக் கலையில் தான் இன்னும் பூரணத்துவம் பெறவில்லை என்று அவர் நினைத்ததே அதற்குக் காரணம். பிறருடைய கனவுகளை வெறும் பார்வையாளனாக எட்டி நின்று பார்த்துக் கொண்டிருக்கும் அளவோடு அவர் அப்போது திருப்தி அடையாதவராக இருந்தார். அவர்களின் தூக்கத்துள் மட்டுமல்லாமல் கனவுகளுக்குள்ளும் ஊடுருவி அந்த உலகின் வினோதங்களைத் தன் விருப்பத்துக்கேற்ப கட்டுப்படுத்தும் அளவுக்குத் தன் வித்தையில் முன்னேற அவர் விரும்பினார். அந்த எல்லையை அவருடைய ஆசானான கேரள நம்பூதிரியும் தொட்டிருக்கவில்லை. எனவே அதை அடைந்த பிறகே அந்தக் கலையைப் பிறருக்கு உபதேசிக்கும் தகுதி தனக்குக் கைகூடுமென்று அவர் மனதில் வரிந்துகொண்டிருந்தார். அதனால்தான் அவர் ராஜனுக்கும் முக்கியஸ்தர்களுக்கும் மழிக்கச் செல்லும் நேரங்களைத் தவிர பிற சமயங்களில் தன் வாரிசுகளைத் தன் மனைவியின் பொறுப்பில் விட்டுவிட்டு அறைக்கு வெளியே எல்லா வசதிகளையும் செய்து கொடுத்துவிட்டு அறையினுள்ளேயே எந்நேரமும் தன்னை அடைத்துக்கொண்டவராகவும் அதைப் பற்றி மேலும் மேலும் ஆராய்ச்சிகள் செய்துகொண்டே இருப்பவராகவும் இருந்தார். மூன்றாவது பிரயோகத்திற்குப் பிறகு அவருடைய புற இருப்பில்

மாற்றம் ஏற்பட்டதேயொழிய வித்தை மேல் அவருக்கிருந்த அவளற்ற வேட்கையை அபரிமிதமான செல்வமும் புகழும் குறைக்கவோ மாற்றவோ முடியவே இல்லை. ஜெகப் பிரசித்தமான இந்த மூன்றாவது பிரயோகத்தை சாத்தியமாக்கியதென்ற பெருமையை ராஜன் மகளின் வினோதமான நோய் பெற்றுக் கொண்டது. அந்த நோயோ இருபத்துமூன்றாம் தலைமுறை ராஜனின் மனக்குறையிலிருந்து துவங்கியது.

பழைய நகரத்தில் அரச பாரம்பரியத்தின் அனைத்து தலைமுறைகளும் அதுவரை அதன் ஆண்வாரிசுகளால் தழைத்து வந்தன என்று முன்பு சொன்னேனல்லவா. என் முதிர்முப்பாட்டனாருக்கு அரண்மனையில் இடங்கொடுத்த இருபத்துமூன்றாவது தலைமுறையில் முதன் முதலாக சமஸ்தானத்தைக் கட்டியாளவென்று ஒரு பெண் வாரிசு வந்து பிறந்தது. பிற்காலத்தில் கொஞ்சக் காலம் ராஜ குடும்பத்தின் பெயரை அதன் அத்தனை ஆண் வாரிசுகளைக் காட்டிலும் அதிகத் திறமையோடும் பரிவோடும் கட்டிக் காத்தவளென்ற பெருமை அந்தப் பெண் வாரிசுக்குக் கிடைத்ததென்பது பொய்யில்லை. எனினும் பெண் வாரிசின் மூலமாக அரச குடும்பத்தின் கோத்திரக் கண்ணி அறுந்துவிடுமென்று ராஜன்தான் துவக்கத்தில் மிகவும் பயந்துபோயிருந்தான். பின்னால் அது உண்மையாகிவிட்டதென்றும் வைத்துக் கொள்ளுங்கள். ராஜதானியில் வருடங்களுக்குப் பிறகு தோன்றிய குழப்பமும் அபசகுனங்களும் பஞ்சமும் அதன் எல்லைக்குள் கலிகாலத்தின் அடைசலும் பெண் வாரிசு மூலமாக வளைசலடைந்த கோத்திரம் சரியான சடங்குகள் மூலம் நேர் செய்யப்படாததால் விளைந்தவை என்று பிற்காலத்தில் கணித்தவர்கள் உண்டு. அது நம் கதைக்கும் கவனத்துக்கும் வெளியிலிருப்பவை. ஆனால் அந்த பயத்தாலேயே ராஜன் தனக்கு ஒரே ஒரு ஆண்வாரிசு வேண்டி தன் இளமைக் காலத்தின் வீரியம் குறைந்ததாகச் சலிப்புறும் மட்டும் புத்திர காமேஷ்டி யாகங்கள் செய்துவந்தான். அவனுடைய சோகம் அந்த நாட்களில் படிப்படியாக படுக்கையறையிலிருந்து வெளியே கசிந்து அரண்மனைத் தாழ்வாரங்களை எட்டிக் கடந்து வாசற்படிகளில் வழிந்து இறங்கி நாடு முழுவதும் நிரம்பி மூச்சுவிட முடியாதபடி ததும்பிக் கிடந்தது. மக்களும் மன்னனுக்காக இரங்கி அவருக்கு ஒரு ஆண் வாரிசு கிடைக்க வேண்டி தனித்தனியே அவ்வித யாகங்களைச் செய்ய முற்பட்டதில் என் முதிர்முப்பாட்டனார் அங்கே வாழ்ந்த காலத்தில் பழைய நகரம் முழுக்க யாகங்களால் ஆசிர்வதிக்கப்பட்ட ஆண் மகவுகளால் நிரம்பி வழிந்ததென்று என் கொள்ளுப் பாட்டனார் மூலமாக எங்களுக்குச் சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால் சம்ஸ்தானத்தின் இருபத்துமூன்றாம் தலைமுறைக்கு ஒரு பெண் வாரிசு மட்டுமே எங்களுக்குச் சொல்லப்படிருக்கிறது. ஆனால் சமஸ்தானத்தின் இருபத்துமூன்றாம் தலைமுறைக்க்கு ஒரு பெண் வாரிசு மட்டுமே கடவுளால் அனுக்கிரகிக்கப்படிருந்ததால் ராஜனும் மக்களும் செய்த யாகங்களால் ராஜ பரம்பரைக்கு மட்டும் பலன் எதுவும் கிட்டவில்லை. இதை முன்பே எதிர்பார்த்துதானோ என்னவோ ராஜனும் ஒருபக்கம் யாகங்களிலும் தான தர்மங்களிலும் காலத்தையும் பொருளையும் விரயம் செய்துகொண்டிருந்தபோதிலும் இன்னொரு பக்கம் தன் பெண்ணை இருபத்தியிரண்டு ஆண்களுக்குச் சமமான வலிமையும் குணவிசேஷமும் கல்வியறிவும் கொண்டவளாக வளர்ப்பதற்கு எல்லா ஏற்பாடுகளையும் செய்தும் வந்தான். இந்த நம்பிக்கையின்மையே

அவனுடைய யாக முயற்சிகளின் வியர்த்தத்துக்கு ஒரு காரணம் என்றும் சொல்லுபவர்கள் இருந்தார்கள். ராஜனின் மனக்குறையை ஈடு செய்யும் வண்ணம் ஓரோர் சமயம் அப்படிக் குறைப்பட்டுக் கொண்டதே மதியீனம் என்று அவர் உவகையோடு சலித்துக் கொள்ளும் வகையில் அந்தப் பெண் ராஜன் பயிற்றுவிக்கச் செய்த சாஸ்திரங்கள் அனைத்தையும் பிரமாதமாகக் கற்றுத் தேர்ந்தாள். அந்தக் காலத்தில் அவளைப் போல ஆட்சிக் கலையையும் போர் சாஸ்திரங்களையும் கற்றுத் தேர்ந்த மானுடப் பிறவிகள் உலகத்திலேயே வேறெங்கும் இருக்கவில்லையென்பார்கள். அந்தப் பெண் என் முதிர்முப்பாட்டனாரிடத்தில் வர்மக் கலையைக் கற்றுக் கொள்ள ஏற்பாடாகியிருந்தது. வர்மக்கலை துருத்திய ஸ்தனங்களும் அடங்கிய குறியும் கொண்ட பெண் பிறப்புக்கு ஏற்ற கலையல்ல என்றும் அதன் நுணுக்கங்கள் பிற போர் சாஸ்திரங்களைப் போலல்லாது பெண் படைப்புக்கு நேரெதிரான அடங்கிய மார்பும் துருத்திய குறியும் கொண்ட ஆண் உடலின் அசைவுகளுக்கும் பிரயோகத்துக்குமென்றே பொருத்தி வரும்படி அமையப்பெற்றவையென்றும் கூறி என் முதிர்முப்பாட்டனார் அதை அந்தப் பெண்ணுக்குக் கற்றுத்தர முதலில் மறுத்துவிட்டார். ஆனாலும் ராஜனின் வற்புறுத்தலும் அந்தப் பெண்ணின் அடங்காத ஆர்வமும் அவற்றை அவமானப்படுத்தலாகாதென்னும் கசிவை அவருள் கீறி விட்டுவிட்டது. வேறொரு காரணமும் அதற்கு இருந்தது. ருதுவெய்திய பிறகு முதன்முதலாக ராஜன் மகள் தன்முன் சிஷ்யையாகும் ஆர்வத்து என் முதிர்முப்பாட்டனார் குறிப்பிடும் அந்த நோய் ராஜன் மகள் தன் திருமண வயதை எட்டிய போது ஒரு விபரீதமான ஆசையாக அவளிடமிருந்து வெளிப்பட்டது. ஏற்கனெவே ஆண் வாரிசு ஏக்கத்தால் நொந்து போயிருந்த சமஸ்தானாதிபதி அவளுடைய ஆசையைக் கேட்டு இடியுண்ட நாகம் போலாகிவிட்டான். அவனை உடல் நோய் பற்றிக் கொண்டது முதன்முதலாக அப்போதுதான். அந்தச் சமயங்களில் ராஜனின் மனைவிதான் மிகுந்த தைரியத்தோடும் சமயோசிதத்தோடும் செயல்பட்டு ராஜ்ஜிய பரிபாலனத்தையும் குடும்பப் பிரச்னைகளையும் சமாளித்து வந்தாள். உண்மையில் பெண்ணின் திருமணப் பேச்சை முதலில் துவக்கிவைத்தவள் ராஜனின் மனைவிதான். பதினான்காம் வயது நடந்து கொண்டிருந்தபோது ஆட்சிக் கலையிலும் போர்க்கலையிலும் உலக நடப்புகளிலும் ராஜனின் பெண் கற்றுக்கொள்ளக் கூடிய பாடமென்று இனி எதுவும் இல்லையென்றாகிவிட்டபடியால் அவளுக்குத் திருமணம் செய்து வைத்துவிடுவதென்று அந்த அம்மையார் விரும்பினார். ராஜன் கூட தன் பெண்ணின் திருமண விஷயமாக முதலில் யாதொரு முடிவையும் எடுக்கும் விருப்பம் இல்லாமலிருந்தான். இருபத்திரண்டு ஆண்களுக்கு இணையான தைரியமும் சாதூர்யமும் அருளப்பெற்ற அவனுடைய பெண்ணும் தன் திருமணத்தில் ஆர்வமில்லாதவளாகவே தன்னைக் காட்டிக் கொண்டிருந்தாள். அந்த நிலையில் ராஜனின் மனைவியே இருவரிடமும் பேசி ஒரு பெண் திருமணம் ஆகாமல் தன் பதினைந்தாம் பிராயத்தைத் தாண்டுவது குலநாசத்தை விளைவிக்கும் என்பதையும் எடுத்துக் கூறி இருவரையும் சம்மதிக்க வைத்தாள். தன் பெண்ணின் கணவனால் ராஜ குடும்பத்தின் கோத்திரம் துண்டிக்கப்படக் கூடுமென்று அந்த விஷயத்தைப் பற்றிப் பேசவே பயந்துகொண்டிருந்த ராஜனும் அதைவிடப் பெரிய பாவம் ஒரு பெண்ணுக்கு மோட்சத்துக்கு ஒப்பான கன்னி கழியும் சடங்கைத் தடுத்து நிறுத்துவதென்று அறிந்து தன்னைச் சமாதானப்படுத்திக்கொண்டான். ராஜனின் பெண்ணும் தன் திருமண ஏற்பாட்டுக்குத் தடையேதும் கூறவில்லை. ஆனால் தனக்கு வாய்க்கப் போகிற கணவன் குரூபியாகவும் ரோகியாகவும் இருக்க வேண்டுமென்று அவள் நிபந்தனை விதித்தாள். மதி நுட்பத்திலும்

மனோதிடத்திலும் இருபத்திரண்டு ஆண்களுக்கு இணையான ஆற்றல் வாய்க்கப் பெற்றப் பெண் ஏன் இப்படிப் பேசுகிறாள் என்பது யாருக்குமே புரியவில்லை. இதுதான் ராஜன் மகளை பீடித்த வினோதமான நோய். அவளோ பிரமாதமான அழகி. அவளுடைய பச்சையொளி உமிழும் கண்களின் ஜொலிப்பு வர்மக்கலையின் அடிப்படையைத் தகர்த்துவிட்டதென்று என் முதிர்முப்பாட்டனார் புகழ்ந்து பேசுகிறார். ராஜ்ய பரிபாலனம் மீதான நேரடிப் பயிற்சிக்காக அவள் தன் தந்தையுடன் நாட்டின் பல பகுதிகளுக்குப் பயணம் போவதுண்டு. அந்தக் காலங்களில் அவள் உடலின் வாசனையும் தண்மையும் காற்றில் கலந்துவிட்டால் அந்தக் காற்று நாட்டின் எந்தப் பகுதிகளில் பட்டுப் பரவுகின்றதோ அந்தப் பகுதிகள் மழை இல்லாமலேயே முப்போக விளைச்சலுக்கு மூன்று வருடங்கள் தாக்குப்பிடிக்க வல்லவையாக மாறின என்பார்கள். அந்தப் பெண்ணின் திருவுருவத்தை வரைய முடியாதென்று அரண்மனைக்கு வருகை தந்த உலகின் தலை சிறந்த சைத்ரீகனும் கைவிரித்து விட்டபடியால் அவளுடைய உருவப்படம் எதையும் அரண்மனைச் சுவர்களில் மாட்டி வைக்க முடியவில்லை. பின்னாளில் நிலைமை சகஜமாகி யாவும் சுபமாக முடிந்த பிறகு அவளுக்குத் தகுந்த வரனைத் தேடி பல தேசங்களுக்குப் புறப்பட்டுப் போன தூதுவர்கள் தங்கள் கையில் அவளின் பார்வையொளியையும் குரலையும் சிமிழ்களில் அடைத்து எடுத்துச் சென்றதாகவும் சொல்லுவார்கள். அந்தப் பெண்ணின் அழகைச் சொல்லும் எந்த வசனமும் மிகைப்படுத்தப்பட்டது அல்ல. ராஜனின் பெண்ணுக்கு இணைதேடி பதினாறு திசைகளுக்கு அனுப்பப்பட்டவர்கள் அவ்வாறு அனுப்பப்படும்முன் அரண்மனையின் தலைசிறந்த கவிஞர்களிடமும் உபன்யாசகர்களிடமும் அவள் அழகை எடுத்து சொல்லப் பயிற்சி பெற்றுக்கொண்டார்கள். வர்ணனைகளிலும் கட்டுக்கதைகளிலும் கலந்து காலத்தை ஊடுருவி வளர்ந்து பிரகாசித்துக் கொண்டேயிருக்கிறது அவள் அழகு. அப்படிப்பட்ட அழகுள்ள ராஜனின் மகள் தனக்கு வாய்க்கவிருக்கும் கணவன் ரோகியாகவும் குரூபியாகவும் இருக்க வேண்டுமென்று ஏன் விரும்புகிறாள் என்று ராஜனின் மனைவி சகல சாஸ்திர பண்டிதர்களுடன் கூடி விவாதித்தாள். ராஜனோ வளைசலுற்ற கோத்திரமாகவாவது வளரும் வாய்ப்புப் பெற்றிருந்த பழைய நகரத்தின் ராஜ்ஜிய பரிபாலனம் வாரிசேயின்றி துண்டிக்கப்படப்போகிறது என்று தன் நோய்ப் படுக்கையில் புரண்டு சதாசர்வகாலமும் புலம்பிக் கொண்டேயிருந்தான். துவக்கத்தில் தன் பெண்ணின் வினோதமான ஆசையை ராஜனின் மனைவி சட்டை செய்யவில்லை. யவ்வனத்தில் புத்தம் புதிய ரத்தம் பிறரிடம் அதிர்வையும் கவனக்குவிப்பையும் ஏற்படுத்தும் செயல்களைச் செய்ய விழைவது சகஜம் என்று அவள் அதை ஒதுக்கிவிட்டாள். நான்காவது தடவையாக திருமணப் பேச்சை எடுத்த போதும் அந்தப் பெண் தன் நிபந்தனையை மாற்றமின்றி முன்வைக்க முனைந்ததால் அவள் நடவடிக்கைகளைக் கண்காணிக்க ஆட்களை நியமித்து வைத்தாள். அரண்மனையின் உச்சி அடுக்கிலிருந்த தன் படுக்கையறைக்குள் துயிலப் போகும் நேரம் வரை ராஜன் மகள் தீவிரமாக கண்காணிக்கப்பட்டாள். படுக்கையறையின் பக்கத்து அறையில் அவளுக்குத் துணையாகப் படுத்துக்கொள்ளும் தோழியும்கூட அந்நிய ஆடவர் யாரையும் நிசியின் எந்தச் சாமத்திலும் பார்க்கவில்லையென்று சத்தியம் செய்தாள். எனவே திருமணத்தை ஒத்திப்போடும் ரகசியம் எதுவும் தன் பெண்ணின் ஆபத்தான பருவத்தைப் பாதிக்கவில்லையென்று ராஜனின் மனைவி தன்னைத் தேற்றிக்கொண்டாள். ஆனால் அது உறுதிப்பட்டதும் அவளுக்கும் ராஜனின் நோய் தன்னைத் தொற்றிக்கொள்ளலாமென்ற பயம் வந்துவிட்டது. பதினோறாவது தடவையாக திருமணப் பேச்சை

எடுத்தப் போதும் நம் பேரழகி சற்றும் இரக்கமின்றி தன் நிபந்தனையை முன் வைக்க முற்பட்ட போது நோய்ப் படுக்கையில் முனகிக்கொண்டிருந்த ராஜன் வெளியே ஓடி வந்து அவளுடைய கழுத்தை நெரித்துக் கொன்றுவிட எத்தனித்தான். தான் குற்றம் செய்யாதவளென்றும் குரூபியும் ரோகியுமான எந்த ஆணைத் தன் பெற்றோர்கள் கை காட்டினாலும் அவனைத் தன் கணவனென்று வரித்துக்கொள்ளத் தயாராக தான் இருப்பதாகவும் அழகான ஆண்களைக் கண்டால் ஏனோ காரணமற்ற ஒரு குமட்டல் தன் வயிற்றிலிருந்து கட்டுப்படுத்த முடியாதபடி பீறிட்டு எழுகிறதென்றும் அதன் காரணம் தனக்கே தெரியவில்லை என்றும் அந்தப் பெண் சொல்லி அழுதாள். தான் கதியற்றப் பெண்ணாகி விட்டதாகக் கூறி கண்ணீர் விட்டாள். ராஜ பரம்பரையின் இருபத்துமூன்று தலைமுறைகளில் அப்படிக் கண்ணீர் விட்டு அழுதவர் யாரும் இல்லை. விஷயம் அவளுக்கு மிகப் பிரியமான ஒரே ஆண்மகனான என் முதிர்முப்பாட்டனாரின் காதை எட்டுவதற்கு முன் ராஜனின் மனைவி தன்னாலான எல்லா உபாயங்களையும் செய்து பார்த்துவிட்டிருந்தாள். அந்தப் பெண் பிறந்த நட்சத்திரமும் புஷ்பவதியான நட்சத்திரமும் மறுபடி புரட்டி பார்த்துக் கணிக்கப்பட்டன. அற்புதமான அவள் ஜாதகத்தில் தோஷமென்று ஒரு வழிப்போக்கன் சொல்லிவிட்டாலும் உடனே எப்போதும் எரிந்துகொண்டிருந்த புத்திரகாமேஷ்டி யாக நெருப்போடு தோஷ நிவர்த்திக்கான யாக நெருப்பும் மூட்டப்பட்டு கொழுந்து விட்டெரியத் துவங்கியது. புறவயமாக அவள் உடலில் நோயின் எந்த அடையாளத்தையும் காண முடியாமலும் நிதம்பத்தின் ரோமச் சுழிகளினுள் வெண்ணிறமாய் அது உறைந்திருந்ததை ஊகித்தறியும் திறனற்றவர்களாயுமிருந்த பல தேசங்களிலிருந்து வரவழைக்கப்பட்ட வைத்தியர்கள் யாவரும் கைவிரித்த பிறகு கடைசியாக அனைவரும் என் முதிர்முப்பாட்டனாரின் உதவியை நாடி வருவதற்குள் ராஜன் மனைவி பயந்தபடியே பெண்ணின் பதினைந்தாம் பிராயம் முடிந்துவிட்டது.

மகளின் பிரச்னை பற்றி பேசியழைப்பதற்குத் தலைமை மந்திரியை அனுப்பினால் அதை மரியாதைக் குறைவாக அவர் எடுத்துக் கொண்டுவிடக் கூடுமென்று அந்த தினத்தில் ராஜனின் மனைவியே நேரில் என் முதிர்முப்பாட்டனாரின் குடியிருப்புக்கு வந்திருந்தார். அவர் இல்லத்தின் தனியறைக் கதவு அவரை வெளியை அழைத்துத் தட்டப்பட்டதும் ராஜன் மகளின் பதினாறாம் பிராயத்தைத் துவக்கியதுமான அந்த நாள் அவருடைய அழிவைத் துவக்கிவைத்த முதல் நாளுமாகுமென்று வருடங்களுக்குப் பிறகு பிரசித்தி பெற்ற இந்தக் கதையை எழுதப் புகுந்த பலரால் அந்த நிகழ்ச்சி கணிக்கப்பட்டதற்கேற்ப பின்னாளில் வேறு பல காரணங்களால் திசை மாறிப் போய்விட்டாலுங்கூட துவக்கத்தில் என் முதிர்முப்பாட்டனாருடைய புகழ் கடல் கடந்தும் பரவி நிலை பெறக் காரணமாயிருந்த அழைப்பாக அது அமைந்துவிட்டது என்பது உண்மைதான். தன் வாழ்நாளில் அதற்கு முன்பும் பின்பும் எந்தக் காரணத்தை முன்னிட்டும் அரண்மனை வளாகத்தைத் தவிர வேறெங்கும் முகதரிசனத்தைக் காட்டியருளாத ராஜனின் மனைவி தன் வீட்டில் எழுந்தருளியது தனக்கும் தன் குடும்பத்திற்கும் ராஜகுடும்பம் செய்த மரியாதைகளிலேயே மிகப் பெரிய மரியாதை என்று தெரிவித்த என் முதிர்முப்பாட்டனார் ராஜனின் ஆணைக்காகவோ ராஜன் மனைவியின் பணிவிற்காகவோ தனக்குக் கிட்டவிருக்கும் புகழுக்காகவோ இல்லாவிடினும்கூட ராஜனின் பெண் தன் பிரியத்துக்குரிய ஒரே சிஷ்யையென்று கூறி ராஜன் மனைவி அழைத்ததும்

உடனே புறப்பட்டு வர உவகையோடு ஒத்துக்கொண்டார். அப்படிப் புறப்பட்டுச் சென்ற அவர் ராஜன் மகளின் படுக்கையறையிலிருந்து அவளின் துர்கனவுக்குக் காரணமான புலியை விரட்டியடித்த கடைசி நாளையும் சேர்த்து மொத்தம் அறுபத்தெட்டு நாட்கள் அவளுக்கு வைத்தியம் செய்தார் என்று சொல்லப்படுகிறது. வருடங்களுக்கு முன் அந்தப் பெண் அறிமுகப்படுத்தப்பட்ட கணத்திலேயே அவளைத் துன்புறுத்தப் போகும் நோயைக் கண்டுகொண்டுவிட்டிருந்தாரானாலுங்கூட எவ்வளவு காத்திரமான நோயாயிருந்தாலும் அது அமிர்தத்தை உடனே ருசிக்கத் தகுதியற்றது எனும் வைத்திய சாஸ்திர விதிப்படி என் முதிர்முப்பாட்டனார் சம்பிரதாயமான முதல் வழியிலிருந்தே தன் வைத்தியத்தைத் துவக்கினார். அவருடைய பிரயோகத்தால் அதுவே பலனளித்துவிடுமென்றும் அனைவரும் எதிர்பார்த்தார்கள். முதல்வழி என்பது ஒரு நோயாளியின் உடலினுள் தங்கி நோய்க்கிருமிகளை உற்பத்தி செய்யும் துர்மணத்தின் மூன்று வகைகளில் மிகச் சாதாரணமான முதல் வகையை அணுகும் வைத்திய முறையாகும். இதைத் தூயவைத்தியப் பிரயோகம் என்பார்கள். இந்த முதல் வகையில் நோயாளியின் நாக்கானது உடல் உறுப்புகளின் வழியாக ஊடுருவி உள்ளே ஆக்கிரமித்திருக்கும் துர்மணத்தால் கட்டுப்படுத்தப் படுகிறது. மழையில் நனைவதால் குளிர் சுரம் கண்டு பிதற்றும் நோயாளிகள் இந்த வகையில் அடங்குவர். இது ஒரு சாதாரண உதாரணம். இவ்வகையிலேயே அடையாளம் காண முடியாத நோய்க் கிருமிகள் நோயாளியின் குரலுக்குள் புகுந்து செய்யும் மாயங்கள் பல்லாயிரக்கணக்கானவை உண்டு. இவற்றுக்கான வைத்தியத்தில் அபூர்வ மூலிகைகளின் பிரயோகமும் சில சமயம் நோயாளிக்கு பதிலாக மூலிகைகளைச் சவைத்துச் சாப்பிடும் வைத்தியரின் மூச்சுக்காற்றை நோய்வாய்ப்பட்டவர் சுவாசித்தலும் முக்கியப் பங்காற்றுகின்றன. ராஜனின் பெண்ணுக்கு இவ்வகை வைத்தியம்தான் முதலில் கொடுக்கப்பட்டது. ஆண்களுக்கே உரிய வர்மக் கலையை வலுக்காட்டாயமாக விரும்பிக் கற்றுக்கொண்ட காலத்தில் அதன் அடவுகளோடு ஒத்துப் போகாத பெண்ணுடலின் மென்நரம்பு ஏதேனும் பிறழ்ந்து நினைப்பதற்கு நேர்மாறான வார்த்தைகளை அவளுக்குள்ளிருந்து கிளப்பிவிடுகிறதோ என்கிற சந்தேகத்தில் அதை முயன்று பார்த்தார் என் முதிர்முப்பாட்டனார். இவ்வகை வைத்தியம் முப்பத்து மூன்று நாட்கள் தொடர்ந்து நடந்தது. ராஜன் பெண்ணின் வினோத வார்த்தைகள் முதல் வகை துர்மணத்தால் விளைந்தவையல்ல என்று முடிவான பிறகு இரண்டாவது வகையான ஞாபகத்திலிருந்து குரலைத் தாக்கும் கிருமிகள் அவளைப் பீடித்திருக்கக் கூடுமென்ற கணிப்பின் பேரில் மூன்று நாட்கள் இடைவெளிக்குப் பிறகு அதற்கான வைத்தியம் துவங்கியது.

ரத்த சம்பந்தமுள்ள மூதாதையரின் துர்மரணத்துக்கு ஒரு வாசனை உண்டென்பது மாந்திரீக சாஸ்திரத்தின் அடிப்படை பூர்ணத்துவம் பெறாத சாவின் வாசனை சில தலைமுறைகளேனும் காத்திருந்து பிறகு அழகிலும் அறிவிலும் பூர்ணத்துவம் பெற்ற தன் சந்ததியொன்றால் நுகரப்படும்போது அமைதியுறுமென்பார்கள். ரோகியாகவும் குரூபியாகவும் பிறந்து இறந்து போன ராஜன் ஒருவன் ராஜ குடும்பத்தின் மூன்றாம் தலைமுறையில் பதின்மூன்று வருடங்கள் வாழ்ந்திருந்தான். அந்த ராஜனின் மரணத்தின் மணம் நமது பேரழகியின் ஞாபகத்துக்குள் புகுந்து ஊடுருவியக்கக் கூடுமென்கிற ஊகத்தில் இரண்டாவது வைத்தியமுறை மேற்கொள்ளப்பட்டது.

இவ்வகை நோய்களை உண்டாக்கும் கிருமிகள்தான் ஞாபகத்தின் நோய்க்கிருமிகள் என்று அழைக்கப்படுகின்றன. இவை நோயாளியின் அறிவை ஒரு கெட்டியான நீர் வளையம் போலச் சுற்றிச் சூழ்ந்து கொள்கின்றன. இம்மாதிரி ஞாபகத்தின் வளையத்துக்குள் சிக்கிக் கொண்ட நோயாளியின் குரல் மூலமாக உடனடியாகவும் பிறகு புறத் தோற்றத்தினூடு கொஞ்சம் கொஞ்சமாகவும் அந்தக் கிருமிகள் தன்னுடைய பழைய திட வடிவை அடைந்து விடுகின்றன. அதாவது ஞாபகமாய் உட்புகுந்த கிருமிகள் மீண்டும் கடந்த காலத்தை நோயாளியின் கண்முன்னே நிகழ்த்தத் துவங்கிவிடுகின்றன. நிகழ்காலத்தைப் பார்வையிலிருந்து மறைத்து விடுகின்றன. ஞாபகத்தின் நோய்க் கிருமிகள் உட்புகும் வழிகளையும் அவற்றின் போக்குகளையும் அவற்றோடு மயிர்க்கண்களுக்கு உள்ள தொடர்பையும் அறிந்தவரும் தேர்ந்த நாவிதருமான என் முதிர்முப்பாட்டனார் ராஜன் மகளின் கூந்தலின் நுனிப் பகுதியையும் காது மடல்களின் மறைவில் சுருண்டு கொண்டிருக்கும் மயிர்க்கற்றைகளையும் இடது புறங்கையின் மேல் அரும்பியிருந்த ரோமத்தூவிகளையும் கத்தரித்து எடுத்துவிட்டார். சில உக்கிரமான ரகசிய மந்திர உச்சாடனங்கள் மூலமாகவும் அபூர்வச் செடி வகைகளை எரிப்பதாலுண்டாகும் நெடியின் மூலமாகவும் நோயாளியின் அறிவைச் சுற்றி வளைத்துக்கொண்டிருக்கும் ஞாபக வளையத்தைக் கரைக்க வேண்டியிருக்கிறது. சில கடினமான வைத்திய முறைகளின் பிரயோகமும் தேவைப்படலாம். ஆனால் ராஜன் பெண்ணுக்கு ஏற்பட்டிருந்தது அவ்வகை நோயல்ல என்பது துவக்கத்திலிருந்தே என் முதிர்முப்பாட்டனாருக்குத் தெரிய வந்திருந்ததால் கடினமான வழிகளை அவர் முயற்சிக்கவில்லை. சந்தேக நிவர்த்திக்காக சில பரீட்சார்த்த முறைகளைக் கையாண்டு பார்த்து ஞாபகத்தின் நோய்க்கிருமிகள் இருக்கும் தடயம் எதுவும் இல்லைஎய்ன்பதைத் தெரிந்துகொண்டபின் அவர் அந்தப் பெண்ணின் கனவுகளை பார்த்தறிவதைத் தவிர வேறு வழியில்லை என்னும் முடிவுக்கு வந்தார். இரண்டாம் வகை வைத்தியத்தில் மேலும் இருபத்திரண்டு நாட்கள் கடந்து போயிருந்தன. முதல் இரண்டு வகைப் பரிசோதனைகளால் மிகவும் களைத்துப் போயிருந்த பெண் மீண்டும் தன் இயல்பான கனவுகளைக் காணத் துவங்கும் திடம் பெறுவதற்கு ஒரு வார காலமாகும் என்றும் அந்த ஏழு நாட்களுக்குள் தன்னையும் ஆயத்தப்படுத்திக்கொள்ள அவகாசம் தேவைப்படுகிறதென்றும் கூறி ஐம்பத்தெட்டு நாட்களுக்குப் பிறகு என் முதிர்முப்பாட்டனார் தன் தனியறைக்குத் திரும்பி வந்தார். அந்த ஒரு வார காலமும் அவர் பித்துப் பிடித்தவர் போல நடந்து கொண்டார் என்று அவர் மனைவி தன் வாரிசுகள் மூலமாக எங்களுக்குச் சொல்கிறார். அந்த ஒரு வாரகாலமும் அவர் பித்துப்பிடித்தவர் போலவேதான் நடந்துகொண்டார். அரண்மனையிலிருந்து திரும்பி வந்த அன்று தன் தனியறைக்குள் நுழைந்தவர் மறுபடி எட்டாம் நாள் அரண்மனைக்குக் கிளம்பிச் செல்லும் வரை தன் அறையை விட்டு வெளியே வரவேயில்லை. சாப்பிடவோ நித்ய கடன்களை நிறைவேற்றிக் கொள்ளவோ முனையவும் இல்லை. நான் அறையினுள் நுழைவதை அவர் தடுக்கவில்லை. ஆனால் ஒரு வாரகாலத்தில் ஒரே ஒரு கேள்வியைத் தவிர வேறெதையும் அவர் என்னிடம் கேட்கவில்லை. அவர் தான் கற்ற ஏடுகளை மீண்டும் முதலிலிருந்து படிக்கத் துவங்கியிருந்தார். அவை பரண்களிலிருந்து சிறு தூரலாய் எந்நேரமும் அவர்மேல் உதிர்ந்த வண்ணமே இருந்தன. அவரோ மழையிலும் பனியிலும் சதா நனைந்து வாடுபவர் போல அதன் பொழிவில் நடுங்கிக் கொண்டேயிருந்தார். யார் யாருடைய கனவுகளை எந்தச் சூழ்நிலையிலும் பார்க்கக் கூடாது என்கிற பாடப்பகுதியின் பக்கங்களை அவர்

விடாமல் திரும்பத் திரும்பப் புரட்டிப் பார்த்துக்கொண்டிருந்தார். அவர் நடவடிக்கைகள் எனக்கு ஒரே சமயத்தில் அரண்மனை விதூஷகனையும் அரச குருவையும் நினைவுக்குக் கொண்டு வந்தன. அவர் தன் அறைக்குள்ளேயே அந்த ஏழு நாட்களுக்குள் குறுக்கும் நெடுக்குமாக மூவாயிரம் யோசனை தூரம் நடந்திருப்பார். ஏழாயிரம் தடவைகளாவது குறிப்பிட்ட அந்தப் பாடப் பகுதியைப் படித்திருப்பார். எனினும் யவ்வனப் பருவத்திலிருக்கும் ஒரு கன்னிப் பெண்ணின் கனவுகளைப் பார்க்கலாமா கூடாதா என்பது பற்றி அவரால் தெளிவான ஒரு முடிவுக்கு வர முடியவில்லை. கடைசியில் தன் கல்வியின் பெருமையிலும் தன் மேதமையின் ஆழத்திலுமே நம்பிக்கையற்றுப் போனவராக அவர் அந்தக் கேள்வியை படிப்பறிவற்ற என்னிடம் கேட்கும் அளவுக்கு பரிதாபத்துக்குரியவராக ஆகிவிட்டார். அதனால் தன் பாண்டித்யத்தின் தூய்மை கெட்டு விடுமென்று அவர் மிகவும் பயந்துபோயிருந்தார். சம்போகத்துக்கு ஒப்பான ரகசியத் தன்மையும் வேகமும் வாசனையுமுடைய ஒரு யவ்வனப் பெண்ணின் கனவுகளை அவள் சம்மதமிருந்தாலும் வைத்தியத்தின் பொருட்டேயென்றாலும் பார்ப்பது சாஸ்திர நியதிக்குட்பட்டதுதானா என்று கேட்டு அவர் ஒரு குழந்தையைப் போல் என் முன் கதறியழுதபோது பத்து இளம் பெண்களுக்கு முன் நிர்வாணமாக நிறுத்தி வைக்கப்பட்டுவிட்டதைப் போல அவருடைய ஆஜானுபாகுவான உடல் இரண்டடி உயரமாகக் குறுகிப் போயிருந்ததைப் பார்த்தேன். ஆனால் அந்தக் கேள்விக்கு என்னாலும் பதில் சொல்ல முடியவில்லை. கடைசி வரை அந்தக் குழப்பத்துடனேயேதான் அவர் அரண்மனைக்குப் புறப்பட்டு சென்றார். அந்த வித்தையைக் கற்றுக்கொண்டதே குற்றமென்று முதன் முதலாக அன்று அவர் தன்னையே சபித்துக்கொண்டதையும் நான் கேட்டேன். தெய்வத்தைத் தொழுது சமாதானப் படுத்திக் கொள்வதைத் தவிர வேறெந்த வழியும் எங்களுக்குத் தெரியவில்லை.

ஆனால் தெய்வாதீனமாக அனைத்தும் நல்லபடியாகவே நடந்து முடிந்தது. மூன்று நாட்கள் கழித்து கரை கடந்த புகழைப் பெற்றுத் தந்த வெற்றியுடனும் அதற்கு மேலாகத் தன் பாண்டித்யத்தின் தூய்மை களங்கப்பட்டுவிடவில்லையென்ற நிம்மதியுடனும் என் முதிர்முப்பாட்டனார் தன் தனியறைக்குத் திரும்பி வந்தாரென்பதுடன் இந்தக் கதை முடிவடைகிறது. சொல்லவொணாத மனக் கிலேசத்துடன் முதல் நாள் இரவு அதுவரை ஆண் வாடையே பட்டிராத ராஜன் மகளின் படுக்கையறைக்குள் அவள் கனவுகளைக் கண்டறியும் நிமித்தமாக உள்ளே நுழைந்த என் முதிர்முப்பாட்டனார் மறுநாள் காலை அறைக் கதவைத் திறந்துகொண்டு வெளியே வந்தபோது தெளிவும் அமைதியும் தீர்க்கமும் அவர் முகத்தில் குடி கொண்டிருந்தன என்று அவரைப் பார்த்தவர்கள் வியந்தார்கள். இரண்டாம் நாள் இரவு ராஜனின் பெண்ணுக்குத் துணையாக எப்போதும் படுக்கையறையுடன் இணைக்கப்பட்டிருக்கும் சிறிய அறையொன்றில் படுத்துக்கொள்ளும் அவள் தோழிக்குப் பதிலாக தான் படுத்துக்கொள்ள விரும்புவதாகக் கூறினார் என் முதிர்முப்பாட்டனார். பலருக்கு இது சந்தேகத்தையும் ராஜ குடும்பம் அவமானப்படுத்தப்படுவதான உணர்வையும் கொடுத்ததாம். ஆனால் அவருடைய விநோதமான போக்குகளையும் ஞான முதிர்ச்சியையும் மனப் பக்குவத்தையும் நன்கறிந்த ராஜனின் மனைவி அதற்கும் உடனே ஒப்புதல் அளித்துவிட்டாள். எனவே இரண்டாம் நாளிரவு ராஜனின் பெண் அவளுடைய படுக்கையறையிலும் என் முதிர்முப்பாட்டனார் அதோடு இணைந்த கதவுகளற்ற அடுத்த அறையில் திரைச்சீலை மறைப்பின்

பின்னேயும் படுத்துக்கொள்ளக் கழிந்தது. மறுநாள் காலை படுக்கையறையிலிருந்து ராஜனின் பெண் விழித்தெழும் முன்பே எழுந்து வெளியே வந்துவிட்ட என் முதிர்முப்பாட்டனார் வைத்தியம் முடிந்துவிட்டதென்று அறிவித்தார். அவருடைய அற்புதத்தை நேரில் பார்த்து அறிவதற்கென்று கடல் கடந்தும் வந்திருந்த ஆர்வலர்கள் அவர் முகத்தை முன்னெப்போதும் பார்த்துப் பழகியிராததால் பேருவகையோடு வெடித்துச் சிதறிய அவர் சிரிப்பின் மின்னல் தாக்கி கண்களை இழந்து நாடு திரும்பினார்கள். மூன்றாம் நாள் காலையில் அப்படி வெளியே வந்த என் முதிர்முப்பாட்டனார் ராஜன் மனைவியிடம் புலி வேட்டைக்கான பாதி ஆயத்தங்களோடு ஒரு இருபது பேர் மூன்றாம் நாள் இரவு தன்னோடு ராஜன் பெண்ணின் படுக்கையறையில் தங்க அனுமதித்து விட்டால் மருந்தும் தயாராகி விடுமென்றும் கூறினார். திருமணமாகாத பெண்ணின் படுக்கையறையினுள் அந்நிய ஆண்கள் நுழைவது கோத்திரம் பிறழ்வதை விடப் பெரிய பாவமென்று ராஜன் புலம்பினான். பின்னாளில் என் முதிர்முப்பாட்டனாரை அடியோடு வெறுக்கத் தலைப்பட்ட ராஜன் மனைவியோ அந்த நேரத்தில் தன் பெண்ணின் நோய் தீர எதுவும் செய்வதற்கு ஆயத்தமாக இருந்தாள். மேலும் பாவ நிவர்த்தியென்று ராஜனை திருப்தி செய்வதற்காக பெண்ணின் தகப்பனும் அன்று இரவு பெண்ணின் படுக்கையறையில் தங்கிக்கொள்ளலாமென்றும் முடிவு செய்யப்பட்டது. ஆக ராஜன் மகளின் நோய் கூட இருபத்திரண்டு ஆண்களுக்குச் சமமான வல்லமை உடையதாய் இருந்ததென்று பாரம்பர்யக் கதைகள் அவளைப் பற்றி வேடிக்கையாய் குறிப்பிடுவதுண்டு. வைத்தியம் முடிவடைந்து என் முதிர்முப்பாட்டனார் தன் குடியிருப்புக்குக் கிளம்ப அனுமதி கோரி ராஜன் முன் நின்றபோது இரண்டு நாட்கள் அறைக்குள் நடந்தது என்ன என்பதை அனைவருக்கும் தெரியச் சொல்லுமாறு ராஜன் மனைவி அவரை வேண்டிக்கொண்டாள். அது தன் கடமையென்பதை ஒத்துக்கொண்ட என் முதிர்முப்பாட்டனார் ஆனால் வைத்தியம் பூரண பலனளித்திருக்கிறதா என்பதைப் பார்க்கும் முன் அதன் வழிமுறைகளை விவரிப்பது வித்தையின் தர்மமாகாது என்பதால் அவர்களைச் சில தினங்கள் பொறுத்திருக்கும்படி வேண்டிக்கொண்டு தன் இருப்பிடம் வந்து சேர்ந்தார். படுக்கையறைக்குள்ளிருந்து வெளிப்பட்ட புலியைப் பார்த்து நீயா என்று கேட்டு மயங்கி விழுந்த ராஜனின் பெண் அதிர்ச்சியிலிருந்தும் தன் கனவுகளிலிருந்தும் விடுபட்டு மீண்டும் தன் பழைய பொலிவை எட்டி விட்டாளென்பதை எழுபத்தியிரண்டாம் நாள் பத்தொன்பதாவது தடவையாக அவளுடைய திருமணத்தைப் பற்றி அவள் தாய் பேசியபோது அழகிய ஆண்களைப் பற்றி அப்படி வெளிப்படையாகப் பேசும் நேரங்களில் தன்னை வெட்கமும் சந்தோஷமும் பிடித்தாட்டுவதாக அவள் கூறியதாக ராஜன் மனைவி மூலமாகத் தெரிந்துகொண்ட பிறகே தன் வித்தையும் யூகமும் தக்க பலனை அளித்துவிட்டன என்று திருப்தியடைந்த என் முதிர்முப்பாட்டனார் நடந்த நிகழ்ச்சிகளை அரண்மனையும் நாடும் அறியச் சொல்வதற்கு ஒத்துக்கொண்டு மீண்டும் அரண்மனைக்கு மரியாதைகளுடன் அழைத்து வரப்பட்டு உரிய ஆசனத்தில் அமர்த்தப்பட்டார். அதற்கு முன்பாகவே என் முதிர்முப்பாட்டனாரின் வைத்தியம் முடிவுற்ற மூன்றாம் நாளிரவில் ராஜன் தன் மனைவியிடமும் இன்னும் சில நாட்களில் கொலைவாளுக்கு இரையாகி மாளவிருக்கிற இருபது வேடர்குல ஆண்கள் தங்கள் மனைவிகளிடமும் உறவினர்களிடமும் அண்டை அயலார்களிடமும் அந்த இரவின் வியத்தகு அனுபவத்தைக் கூறி அதற்கு முந்தைய இரண்டு நாட்களின் நிகழ்ச்சிகளைக் கேட்டறியும் ஆர்வத்தைப் பேரவாவாக வளர்த்துவிட்டிருந்தார்கள். அவர்கள் தங்கள் கற்பனைக்கும் கதை

சொல்லும் திறமைக்கும் கேட்பவர்களின் ஆர்வத்துக்கும் ஏற்பக் கூட்டியும் குறைத்தும் வர்ணனைகளால் அலங்கரித்தும் தங்கள் அனுபவங்களைச் சொல்லியபோது ஒரே அனுபவம் தனித்தனிக் கதைகளாக உருவம் பெற்று அந்த நாளிலிருந்தே இருபது இரவுகளில் இருபது சாமான்யர்களின் சாகஸங்களென்ற வாய்மொழிக் கூட்டுக் கதைப்பாடலாக நாட்டு மக்களிடையே புழங்கிப் பரவத் துவங்கியது. ஒவ்வொரு கதையிலும் அதைச் சொன்னவனின் ரகசிய ஆசைகளுக்கேற்ப அந்த இரவின் ஒவ்வொரு அம்சம் பிரதானமாக வெளித் துலங்கியது. ஒரு கதையில் ராஜன் மகள் அதன் கதாநாயகியாக இருந்தாளென்றால் இன்னொரு கதையில் அவளைப் பற்றின பிரஸ்தாபமே இல்லாதிருந்தது. அதற்குப் பதிலாக கொம்பிசைக் கருவியொன்றின் துளையை மாந்தளிரென நினைத்து அதிலேயே துயின்று இசையாய் மாறிப் பறந்துபோன பொன்வண்டு ஒன்று கதையின் பிரதானமான பாத்திரமாய் மாறியது. இன்னொரு கதையில் அதை கொம்பிசை கடும் புலியொன்றைக் காற்று வெளியில் வரைந்து அதற்கு உயிர் தந்தது. புதிதாகத் திருமணம் செய்து கொண்ட வேடனொருவன் முழவிசையின் உச்சபட்ச அதிர்வினூடே கிளர்ந்த தன் புதுமனைவியின் ஸ்பரிசவுணர்வு பீறிடச் செய்த சுக்கிலத்தின் கதையை அவளுடன் தனியே பேசிப் பகிர்ந்துகொண்டான். ராஜனின் அரண்மனை ஒரு வேடன் கதையில் பெருங்காடாக மாறியது. அதில் அவன் துரத்திய விலங்கு பூவுலகிலெங்கும் காணக் கிடைக்காத பொன்னிறப் புள்ளிகளைத் தன் உடலிலும் கேட்கக் கிடைக்காத துயரத்தைத் தன் குரலிலும் கொண்டிருந்தது. அவன் அதை அம்பெறிந்து கொல்வதற்குப் பதிலாக பூர்வ ஜென்மத்தில் அது தானாகவும் தான் அதுவாகவும் இருந்த கதையை உரக்கக் கூறித் தன் இடுப்பில் கனன்றுகொண்டிருந்த காயத்தைக் காட்டிக் கொன்றான். இறந்தபின் அந்த வினோத விலங்கு ராஜனாய் மாறியது. வனம் மீண்டும் அரண்மனையாகவும் நிஜ ராஜன் தானாகவும் மாற அவன் தன் வீடு வந்து சேர்ந்தான். நிறைந்த மக்கட் செல்வத்தைப் பெற்றிருந்த முதிய வேடனொருவனின் கதையில் இளவரசியின் படுக்கையறையை நிறைத்து வழிந்த இசையாய் அவனுடைய பெண்மக்கள் மாறிப் பறந்துகொண்டிருந்தார்கள். அவர்களுக்கான இணையிசையைத் தேடிச் செல்ல அவர்களுடைய சகோதரர்கள் படுக்கையறை விதானத்தைத் தங்கள் தகப்பனின் தலைமையில் முழவினால் பறித்தெறிந்தார்கள். பெண்மக்களுக்கான யுவன்கள் அவர்களைத் தேடி வெகு விரைவிலேயே வர இருக்கிறார்கள். சில கதைகளில் நெளியும் பாம்புகளை சடையாக அள்ளிப் போட்டுக்கொண்ட கடவுள் ஒருவர் அந்த இரவை பிரபஞ்சத்தின் கால வெளியிலிருந்து தனியே பிரித்து மீண்டும் உலகின் முதல் நானாகப் படைக்கிறார். அவர் என் முதிர்முப்பாட்டனாராகவே இருக்க வேண்டும். ஏனெனில் அந்தக் கடவுள் வயோதிகமற்றவராக இருந்தார். வேறு சில கதைகளில் மழைக் காலத்தின் மென்சோகத்தை கடுங்கோடையிலும் உருவாக்கும் மந்திரக்காரனாக ராஜனும் காற்றுருவமான தேவதையாக ராஜனின் மகளும் தோன்றி அலைகிறார்கள். பின்னாளில் இந்தக் கதைகள் யாராலும் பாடப்படக் கூடாதென்று அரசாணையால் (ராஜனின் விருப்பத்திற்கெதிராகத்தான்) தடை செய்யப்பட்ட போது அதை மீறிப் பாடுபவர்களின் மேல் கொலை வாளுக்கு இரையாகி மாண்ட இருபது வேடர்குல ஆண்களின் ஆவிகள் கவிந்து அரண்மனைவாசிகளின் கண்களுக்குத் தட்டுப்படா வண்ணம் அவர்களின் உருவங்களை மாயமாய் மறைத்துவிடத் துவங்கியதால் நகரத்தின் மேல் வீசும் காற்றில் எப்போதும் கலந்து ஒலித்துக்கொண்டேயிருந்த பாடுவோர் புலப்படாத அந்த மாயப் பாடல் வரிகளை எப்படி

அழிப்பதென்று தெரியாமல் கடைசியில் அவற்றைக் குழப்பி அலைக்கழிக்கும் தந்திரத்துடன் அரண்மனைக் கவிஞர்களைக் கொண்டு அதே வாய்மொழிக் கதைகளின் இருபது வீரர்களையும் அரச வம்சத்தின் இருபது தலைமுறை மன்னர்களாகவும் அவர்கள் பங்கேற்ற அந்த ஒற்றை இரவை நெடிய கால இடைவெளிகளால் பிரிக்கப்பட்ட இருபது தலைமுறைகளின் தனித்தனி இரவுகளாகவும் தனித்தனி ராஜன்களின் சாகஸங்களாகவும் மாற்றி சமஸ்தானத்தின் அதிகாரபூர்வமான பாடற்ச் சுவடியாக்கி கோவில்களிலும் பொது மண்டபங்களிலும் உரக்கப் படிப்பதற்கு ராஜன் மனைவி ஏற்பாடு செய்தாள். இரண்டு விதமாகச் சொல்லப்படும் இப்படிப்பட்ட ஒற்றைக் கதைகளுக்கு எனவே பழைய நகரத்தில் பஞ்சமே இல்லாதிருந்தது. இது ஒரு புறமிருக்க, என் முதிர்முப்பாட்டாரின் ஏற்பாட்டின்படி இருபது வேடர்களுடன் அந்த இரவின் நிகழ்வுகளில் பங்கு கொண்ட ராஜன் தன் மனைவிக்குச் சொல்லியதாகச் சொல்லும் கதை இப்படியாக இருக்கிறது:

முன்பு எத்தனையோ தடவைகள் நான் உனக்குச் சொல்லியிருப்பதனால் ராணீ புலி வேட்டையைப் பற்றி உனக்கும் நன்றாகத் தெரிந்திருக்கும். புலி வேட்டையில் இரண்டு பகுதிகள் உண்டு. கண்களுக்குப் புலப்படாமல் புதருக்குள் பதுங்கியிருக்கும் புலியை மறைவிலிருந்து வெளியே கொண்டு வருவது வேட்டையின் முதல் பகுதி. மறைவிலிருந்து பாய்ந்து வெளிப்படும் மிருகத்தைத் துரத்தியும் அதோடு மோதியும் ஆயுதங்களால் வேட்டையாடுவது இரண்டாம் பகுதி. இரண்டாம் பகுதியைவிட முதல்பகுதி முக்கியமானதும் புலன்களின் கூர்மையை அதிகம் வேண்டுவதுமான ஒன்றாக இருக்கும். தன்னுருவத்தை மறைத்துக் கொண்டிருக்கும் புலியை கண்முன் புலப்படுத்துவது என்பது அத்தனை சுலபமல்ல. அதற்குப் பார்வை நுட்பத்தை விடவும் நுகர்வு நுட்பம் அதிகமாகத் தேவைப்படுகிறது. புலியின் உடலிலிருந்து எழும் பிரத்யேக வாசனையலைகள் காற்றில் கலந்து வருவதை வைத்தே அது எவ்வளவு தூரத்தில் எந்த திசைக்கு முகம் காட்டிப் புதர்களினுள் படுத்துக் கிடக்கிறது என்பதைச் சொல்லும் அசாத்தியத் திறமை மிக்கவர்கள் முதல் பகுதியில் பங்கேற்கிறார்கள். புலியை வெளிப்படுத்த கொம்பு முரசு முழவு ஜண்டை போன்ற வாத்தியங்களை ஒரு குறிப்பிட்ட தூரத்திலிருந்து அந்த இடத்தைச் சுற்றி வளைத்து நின்றபடி இசைத்து கானகத்தையே அவர்கள் அதிரச் செய்வார்கள். ஆனால் புலி உடலளவில் கம்பீரமும் வலுவும் கொண்ட மிருகமானாலும் மிகவும் மென்மையான இதயம் கொண்ட பிராணி. கூட்டு முழக்கத்தில் ஒரு மாத்திரையளவு கனம் கூடினாலும் அதிர்ச்சியில் அது தன் மறைவிடத்தில் உட்கார்ந்திருக்கும் நிலையிலேயே இதயம் வெடித்து இறந்து போய் விடக்கூடும். பிறகு புலிவேட்டையென்கிற வீர விளையாட்டுக்கும் அர்த்தமில்லாமல் போய் விடுமாதலால் புலியை உந்தி விடுவதற்கென்றே இட்டுக் கட்டப்பட்ட சில பிரத்யேக பாடல்களையும் முழக்கங்களையும் இசைப்பதில் தனிப்பயிற்சி பெற்றவர்கள் சிலர் வேட்டைக் குழுவில் சிறப்பிடம் பெறுவார்கள். வேட்டைக்கான சிறப்பு அழைப்புகளைத் தவிர்த்து மற்ற நேரங்களில் நகரத்தவர்களோடு ஒட்டாமல் நாட்டின் எல்லையோரமாக இன்னும் அழிக்கப்படாமல் வளர்ந்து செழித்திருக்கும் வனாந்திரத்தில் அபூர்வமான மிருகங்களின் தோலைக் கொண்டு கட்டப்பட்ட கூடாரங்களுக்குள் தங்களை மறைத்தபடி வாழ்ந்து வரும் வேட்டுவ ஜாதியினருக்குச் சொந்தமானவை நட்சத்திரவாஸிகளின் கலவி என்னும் பொதுப் பெயரால் அழைக்கப்படுகிற இந்தப்

பாடல் தொகுதிகள். இந்த வேட்டுவ ஜாதி ஆண்களில் இருபது பேர்களைத்தான் நம் அரண்மனை நாவிதரும் மகா ஞானியுமான அப்பையா அன்று இரவு நம் பெண்ணின் படுக்கையறை வாசலில் பின்னிரவில் மூன்றாம் ஜாமம் துவங்கும் வரை நிறுத்தி வைத்திருந்தார். அவர்களோடு சேர்ந்து நானும் வெளியிலேயே நிறுத்தி வைக்கப்பட்டிருந்தேன். ராஜன் என்கிற மரியாதையை அப்பையா எனக்குக் கொடுக்கவில்லை என்கிற ஆதங்கம் அப்போது என் மனதை முள்ளாகக் குத்திக் கிழித்துக்கொண்டிருந்ததென்பது உண்மைதான். அதை நான் வெட்கத்தோடு ஒத்துக்கொள்கிறேன். அப்பையா மாத்திரம் இளவரசி படுக்கையறைக்குள் நுழைந்தபோது அவளுடனேயே தானும் உள்ளே நுழைந்துகொண்டுவிட்டார். நுழைந்துகொண்டுவிட்டார் என்று சொல்வதை விட நுழைந்து தன்னை மறைத்துக்கொண்டு விட்டாரென்று சொல்வதே பொருத்தமாக இருக்கும். சேடிப்பெண் வழக்கமாகப் படுத்துக்கொள்ளக் கூடிய இளவரசியின் படுக்கையறையை ஒட்டினாற் போலிருக்கும் இணைப்பறையின் படுக்கையில் தான் படுத்திருப்பது போலத் தோற்றம் தரும்படி தலையணைகளை வைத்து ஒரு உருவத்தை உண்டு பண்ணிவிட்டு மீண்டும் வெளியே வந்து அவர் இளவரசியின் படுக்கையருகே அமர்ந்து கொண்டதாக அனைத்தும் முடிந்த பிறகு என்னிடம் கூறினார். பின்னிரவின் மூன்றாம் ஜாமம் துவங்கும்போது அதற்கான மணி நகரின் மையத்தில் அடிபடும் சத்தம் கேட்டவுடன் கூட்டிசையை ஒலித்தபடி உட்புறம் தாளிடப்படாத படுக்கையறைக் கதவை திறந்து கொண்டு அவர்கள் உள்ளே நுழைந்து ஒலிப்பதை நிறுத்தி விடாமல் இணைப்பறை வாசலை ஒட்டி இடது புற ஓரமாக நின்று கொள்ள வேண்டுமென்பது அப்பையாவின் கட்டளை. இரவின் அமைதியோடும் ஒரு மிருகத்தின் இதயத்துடிப்போடும் ஒரே சமயத்தில் இயைந்து போகும்படியாக கூட்டிசை வெளிப்பட்டுக் கொண்டிருக்க வேண்டுமென்றும் அவர் வற்புறுத்திச் சொல்லியிருந்தார். அறைக்கு வெளியே காத்துக் கொண்டிருந்தவர்கள் அனைவரும் அந்த நேரத்தில் அடங்கிய குரலில் நட்சத்திரவாஸிகளின் கலவி என்கிற பாடலின் வரிகளைப் பாடிப் பழகியும் வாத்தியங்களின் சுதியைத் தீட்டியும் மிகத் தீவிரமாக பயிற்சி செய்துகொண்டே இருந்தார்கள். அப்பையாவின் திட்டம் எவ்வளவு யோசித்துப் பார்த்தாலும் என் ஊகத்திற்கு அப்பாற்பட்டதாக இருந்ததால் யோசிப்பதை விட்டு விட்டு வேடர்களின் பாடல் பயிற்சியின் மீது என் கவனத்தைப் பதித்தபடி நான் பொழுதைக் கழித்துக் கொண்டிருந்தேன். முன்பு பல தடவைகள் புலி வேட்டைக்காக அவர்களுடன் நான் வனப் பகுதிகளுக்கு சென்றிருக்கிறேன். வெறும் ஊளை ஒலிகளையும் புரியாத வார்த்தைக் கண்ணிகளைக் கொண்ட பாடல் வரிகளையும் எழுப்புவதல்லாமல் அவர்கள் இதை இத்தனை சிரமமெடுத்துக் கொண்டு பயிற்சி செய்வார்களென்பது எனக்குத் தெரியவே தெரியாது. புலி இருக்குமிடத்தைச் சுற்றி அரைவட்டமாக தொலைவில் சூழ்ந்து கொண்டு அவர்கள் ஒலியெழுப்பும்போது என் கவனமெல்லாம் மறைவிடத்திலிருந்து புலி பாயவிருக்கும் திசையின் மீதும் தருணத்தின் மீதும் பதிந்து கிடக்கும். வெட்டவெளியில் காரியார்த்தமாக வெளிப்பட்டு பிறகு காற்றோடு கலந்து போகும் ஒரு முரட்டு ஒலித் தொகுப்பு என்கிற எண்ணத்தால் நான் ஒருபோதும் அந்த இசைக்கு அதிக முக்கியத்துவம் கொடுத்துக் கவனித்துக் கேட்டதில்லை. அது எவ்வளவு மகத்தான தவறு என்பதை நான் உணர்ந்து கொள்ளும் சந்தர்ப்பமும் அந்த இரவில் எனக்குக் கிட்டியது. யஜூர் வேதத்தின் வேட்டைக்கான உச்சாடனங்கள் ராணீ அவர்களுடைய ஊளைகளிலும் சீழ்க்கைகளிலும் கொம்புக் கருவிகளினுள்ளும் ஏற்கனவே ஒளிந்து கொண்டிருந்தது. சிறுநெருப்பில் வாட்டப்பட்டு விரைப்பேறிக் கொண்டிருந்த அந்தக் கருவிகளுக்குள்ளிருந்து அவ்வப்போது

